ஓம் பரப்பிரம்மணே நம!

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கி, ஆநந்தத்தைத் தரவல்லதான அநுபவ விநோத ஞான கலா விலாஸங்கள் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள மாதப் பத்திரிகை.

பத்திராசிரியர்:—திரிசிரபுரம் - எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

" எண்ணிய எண்ணியாங் கெய்துப ; எண்ணியார்
COPY RIGHT] திண்ணிய ராகப் பெறின். " (திருக்குறள்.) [64-பக்கங்கள்.

| கமலம்-4. | சென்னை: சுக்கில௵ மார்கழிமீ 1உ | இதழ்-45. |
|---|---|---|
| Vol. 4. | 1929-ம்௵ டிசம்பர்மீ 15உ | No. 45. |




ஆர்பெரிய ரார்சிறிய ரார்உறவ ரார்பகைவர்,
சீர்பெரிய ராநந்த சிற்சொருபர்—பேர்பெரியர்,
எங்கெங்குந் தாமா யிருந்துசட சித்தனைத்தும்
அங்கங் கியற்று மதனால்.

"சிவபூஜையே சிறந்த பூஜை" சிவபூஜை செய்து சிவானுக்கிரகம் பெற்றவர் ஸர்வ ஸுகங்களையும் அடைகின்றனர். உலகத்தில் ஸந்தானம், ஸம்பத்து ஆகிய இரண்டுமுள்ளவர்களைக் கண்டால் பெரியோர்கள் அவர்கள் ஜென்மாந்திரத்தில் சிவபூஜை செய்தவர்களென்று கூறுகின்றனர். இனிய குரலுடன் பாடுகிறவர்களைக் கண்டால் இவர்கள் போன ஜென்மத்தில் சிவ லிங்கத்தின்மேல் எதேஷ்டமான தேனை யபிஷேகம் செய்தவர்களென்கி றோம். மகா சூரர்களான கௌரவர்களையும், பீஷ்ம துரோணர்களையும் ஜெயிப்பதற்காக அர்ஜுனன் சிவபூஜை செய்து பாசுபதாஸ்திரம் பெற்றான். இதன்றி மோக்ஷமடையவேண்டி யோகிகளெல்லாம் ஸதா பரமேசுவரனையே தியானித்துக்கொண்டிருக்கின்றனர். ஆதலின், ஸகல ஸுகங்களையும் இகத்தில் அனுபவித்து முடிவில் முக்தியை எய்துவதற்கு ஸாதகமாயுள்ள சிவ ஸ்மரணையை ஸதா செய்துகொண்டிருக்கக்கடவோம்.

***

"அமிர்த குணபோதினி" உலகவியல்பைப் பலதிறத்தானும் நன்கு விளக்கி இனிமை தோன்றக் கூறுவது. தமிழ்மொழியின்மீது ஆர்வமுடையார் யாவர்க்கும் இப்பத்திரிகை இன்றியமையாதது. மிகவும் புதிய முறை இது.

"எத்தனை கற்றலும் மெய்ஞ்ஞான மில்லாத கல்வியாலென்ன?" நாம் யார்? எதற்காக ஜனித்தோம்? முன் எப்படி யிருந்தோம்? இறந்த பின் எப்படி யாவோம்? இவை வினுக்கள். இதற்கு விடை தெரிந்துகொள்ள சாஸ்திர அறிவு வேண்டும். "மரணம்" என்பது யாது? இறந்துபோக எவராவது விரும்புகிறார்களா? இல்லை. பிறர் மரணமடைவதைக் கேட்டு ஸந்தோஷிக்கிறார்களா? அதுவுமில்லை. ஆயினும் சில ஸமயங்களில் "ஐயோ இந்தப் பாழும் உயிர் நீங்காதா; மரணம் வராதா" வென்கிறார்கள். ஏன் இப்படிச் சொல்லவேண்டும்? ஜீவகாலத்தில் அவர்கள் அடையும் துக்கத்தை விட மரணம் சிறந்ததென்ற அபிப்பிராயத்தினாலன்றோ? சுககாலத்தில் மரணம் வெறுக்கத்தக்கதாயும், துக்ககாலத்தில் மரணம் விரும்பத்தக்கதாயும் இருப்ப தால், அதை அதாவது மரணத்தை இன்பமென்றாவது துன்பமென்றாவது சொல்லமுடியவில்லை. இதை உற்று ஆராய்வதற்கு ஆத்மலக்ஷணம் தெரிய வேண்டும். ஆத்மலக்ஷணம் தெரியாத வித்வான் வாஸனை யில்லாத புஷ்பத் தைப் போலிருக்கிறான். அகங்காரம், பொறாமை, தீராக்கோபம் முதலிய சத்துருக்களை ஜெயித்தாலன்றி விவேகமென்னும் அரிய ரத்நத்தை அடைய முடியாது.

***

"கூட்டோடு போச்சுது குளிரும் காய்ச்சலும்" இதை விளக்க ஒரு உதாரணம் தருகிறோம். முற்காலத்தில் கங்காநதிக்கரையில் ஒரு மகரிஷி ஆசிரமம் கட்டிக்கொண்டு தவமிழைத்து வந்தார். அவர் கங்கையில் ஸ்நானம் செய்து வருவதற்குள் ஒரு குரங்கு ஓடிவந்து ஆசிரமத்திற் புகுந்து மகரிஷியின் தர்ப்பாஸனத்தில் மலவிஸர்ஜனம் செய்து ஓடிப்போம். அவர் அசுத்தத்தை யகற்றிப் புதிதாய் ஒரு தர்ப்பாஸனம் போட்டுக்கொண்டு ஜபம் செய்வார். இப்படியே ஒவ்வொரு நாளும் அந்த வானரம் செய்துகொண் டிருந்ததால் மகரிஷிக்கு மனவருத்த முண்டாயிற்று. குரங்கை சிக்ஷிக்க எண்ணினால் அது அகப்படாமல் ஓடிவிடுகிறது. அது வருமளவும் காத்துக்கொண்டிருந் தால் ஸ்நாந காலம் தப்பிப் போகிறது. இதன்றி, இந்தக் குரங்கை சிக்ஷித்தால் இதற்கண்ணனை மற்றொரு குரங்கு வந்தாலென்ன செய்கிறதென்று ஆலோ சித்தார். கடைசியில், ஆசிரமமே இல்லாவிட்டால் குரங்கு எப்படி வரும் என்று அதைப் பிய்த்தெறிந்தார். ஆசிரமத்தில் வைத்திருந்த அபிமானம் அகன்றவுடன் "கூட்டோடு போச்சுது குளிரும் காய்ச்சலும்" என்பதுபோல் ஸகல கஷ்டங்களும் நீங்கின. இதைப்போல் மனமாகிற திவ்யாசிரமத்தில் கோபம் பொறாமை முதலிய குரங்குகள் நுழைந்து பாபமாகிய மலத்தை விஸர் ஜனம் செய்து ஓடிப்போகின்றன. இவற்றை யொழித்துப் பின்னர் நல்ல எண் ணங்களை உற்பத்தி செய்யவேண்டி யிருப்பதால், பெரியோர்கள் மனமாகிய ஆசிரமத்தையே நாசம் செய்கின்றனர். இப்படி மனோலயமடைந்தவர்களே நித்யாநந்தத்தைப் பெறுவர்.

***

---

ஒருவர் ஒன்றைப்பற்றிக் கேட்க, அதற்கவர் பதில் சொல்லாது உத்தி யோக முறைப்பில் தடுமாறி நிற்க, அவருக்கு அருகில் உள்ள குமாஸ்தா அதற் குப் பதில் சொல்ல—இவ்வளவு தடபுடலாயுள்ளவர்களும் ஒரு நாள் வேலையி னின்றும் தள்ளப்பட்டோ, விலகியோ, பச்சைப் பல்லாக்கு சவாரி ஏறியோ போய்விடுகிறார்கள்! எவ்வளவு உயர்விலும் சாந்த குணம் வேண்டும்.

"சிவனே சிறந்தவர்" என்று சைவர்கள் கூறுகின்றனர். ஹரியே உயர்ந்தவர் என்று வைஷ்ணவர்கள் சொல்லுகின்றனர். இரண்டு மூர்த்திகளும் அவரவர்களின் தொழில்களில் உயர்ந்தவரென்பதில் தடையில்லை. பகவான் பிராணிகளில் சிஷ்டர்களை ஸம்ரக்ஷிப்பதற்காக விஷ்ணு மூர்த்தியாயும், துஷ்டர்களை ஸம்ஹரிப்பதற்காக ருத்திர மூர்த்தியாயும் விளங்குகிறார். ஆகவே, இரண்டு மூர்த்திகளும் உபாஸிக்கத்தக்கவர்களே.

***

"பிறப்பு இறப்பு" ஆகிய இரண்டும் துன்பங்களே. முக்தியையடைய விரும்புவோர் ஜனன மரண துக்கத்தினின்று நிவர்த்தியடைய இச்சிப்பர். ஒவ்வொரு நாளும் நம்முடைய கண்களுக்கெதிரில் எத்தனையோ பிராணிகள் பிறப்பதையும் இறப்பதையும் பார்க்கிறோம். நமக்கு முன்னிருந்தவர்கள் இறந்திருக்கிறார்கள். நாமும் ஒருநாள் நமனுக்கு இரையாக வேண்டியதே. இறந்தவர்கள் பிறந்ததைப்பற்றி நமக்கு ஸந்தேகமுண்டானாலும், பிறந்தவர்கள் இறந்ததைப்பற்றிச் சிறிதும் ஸம்சயம் இல்லை. மகா பராக்கிரமிகளும் மேதாவிகளும் வித்வசிரோமணிகளும் தங்களுடைய காரியத்தாலும் கிரந்தத்தாலும் பெயரை சாசுவதப்படுத்தினார்களேயன்றி சரீரத்தை நிலைக்கச்செய்ய ஒருவராலும் ஸாத்யப்படவில்லை. நாம் செய்யும் காரியங்களிற் பெரும்பாகம் சரீரபோஷணைக்கேயன்றி வேறில்லை. பிரதிநித்யமும் இவ்வளவு பிரயாஸைப் பட்டும் கடைசியில் காயம் அழிந்துபோகிறது. ஆதலின், நித்யமான ஆத்மாவைப்பற்றி விசாரிக்கத் தலைப்படவேண்டும். புண்ய கருமங்களைச் செய்து மனதைப் பரிசுத்தமாக்கவேண்டும்.

***

"ஸ்வபரநலப் பிரியம்" இது ஒவ்வொருவருக்கு முண்டு. ஆயினும், தம்முடைய ஸந்ததியாரின் க்ஷேமத்தைக் கருதியும், இப்பொழுதுள்ள மற்றவர்களின் நன்மையை நாடியும் சிலர் காரியம் செய்வதுண்டு. ஒரு தோப்பை உண்டாக்குவோன் அதிலிருக்கும் விருக்ஷங்களின் பலனைத் தானே அனுபவிக்கிறானா? இல்லை. அநேகர் அப்பழங்களைத் தின்று ஆநந்திக்கின்றனர். இப்படியே கால்வாய், குளம், கிணறு முதலியன வெட்டுவோர் பிறருடைய நன்மையை உத்தேசித்தே மேற்கூறிய காரியங்களைச் செய்கின்றனர். ஜகத்தில் இவ்வித பொதுக் காரியங்கள் நடவாவிட்டால் பிரஜைகள் எப்படிக் காலம் கழிப்பர்? பல தேனீக்கள் சேர்ந்து வைக்கும் கூட்டிலுள்ள தேனை மனிதர்கள் உபயோகிக்கிறார்கள். தேனீ சேர்த்துவைத்த தேனைக் கொள்ளையடிக்கிறோமென்ற ஞானம் மனுஷ்யனுக்குண்டோ? அற்ப ஜந்துக்களாகிய அவைகளிடம் கருணையில்லாமல் அடித்து விரட்டும் மனிதன் நன்றியற்றவனென்பதிற் சந்தேகமென்ன? ஆயினும், இதில் ஒரு உண்மை உண்டு; தேனீக்களே பொதுநன்மைக்குரிய காரியங்களைச் செய்யும்போது மனுஷ்ய வர்க்கத்தைச் சேர்ந்த நாம் சும்மாவிருப்பது நன்றா? ஏதோ நம்மாலான ஸத்காரியம் செய்யவேண்டும்.

***

---

குமாஸ்தாவா யிருந்தவர் போஸ்ட்மாஸ்டராக உயரலாம். தபாற் சேவகன் தன் முயற்சியால் குமாஸ்தாவாக உயரலாம். ஓயாது உழைத்து மேன்மேலும் உயரவே பார். உள்ள நிலை போதுமென்று திருப்திபட்டுவிடாதே.

**"சக்ரவர்த்தியும் ஞானியும்"** ஒரு சக்ரவர்த்தி ஒரு காட்டில் வேட்டையாடிவருகையில் ஒரு ஆசிரமத்தைக்கண்டு அங்கிருக்கும் தபஸ்வியை நோக்கி தண்டன் சமர்ப்பித்து, "ஐயா, தாங்கள் என்னுடைய தேசத்துக்கு வாருங்கள்; இந்தக் காட்டிலிருந்து பனியிலும் வெயிலிலும் வருந்துவானேன்" என்றான். பெரியோர் "வேந்தனே! இவ்வனமே எனக்குப் போதும், பனியும் வெயிலும் சமமே; என்னை அவ்விரண்டும் ஒன்றும் செய்யா" வென்றார். வேந்தன் "ஸ்வாமி! என் நகரம் வந்தால் உங்களுக்கு வேண்டிய பணம் தருகிறேன்" என, பெரியார், "உன்னுடைய பணம் எனக்குத் திரணசமான" மென்றார். இதைக்கேட்டு அரசன் கோபங்கொண்டு, "ஐயா, நீர் இப்பொழுது என்னுடன் வராவிட்டால் உம்முடைய சிரசைக் கொய்தெறிவேன்" என, அவர், "அரசனே! நீ உன்னுடைய வாழ்நாட்களில் இந்த வார்த்தையைப்போல் மூடத்தனமான வார்த்தை மொழிந்திராய்" என்றார். சக்ரவர்த்திக்கு ஆச்சரியமுண்டாயிற்று. அப்போது மஹான் அவனை நோக்கி "அடே! என்னை எந்த ஆயுதமும் சேதிக்காது; நான் பிறப்பு இறப்பு இல்லாதவன்; என் ஸ்தூல சரீரம் மட்டும் அழியும்; என் ஆத்மா அழியாது; என்னை நீ ஊனுடல் என்று தப்பிதமாய் எண்ணி உளறுகிறாய்; ஆகலின் நீ சொன்னதை நான் மௌட்யத்தாலுண்டானது என்றேன்" என விடை கூறி, அவனுடைய அகங்காரத்தைப் போக்கி நாட்டுக் கனுப்பினார். சக்ரவர்த்தியும் வெட்கிச் சென்றான். துறவிக்கு வேந்தனோர் துரும்பு.

***

**"ஸ்வாமி ராம்தீர்த்தர்"** உத்தர தேசத்தில் ஸ்வாமி ராம்தீர்த்தர் என்னும் யோகீசுவரர் ஒருவரிருந்தார். இவர் கிறிஸ்துவ மிஷனரிகள் வைத்துள்ள பாடசாலையிற் பயின்று எம். ஏ. பரீட்சையில் தேறி, அக்கலாசாலையிலேயே சில வருஷங்கள்வரை கணித உபாத்தியாயராக விருந்து, பின்னர் ஹிந்துமத தத்துவங்களை யறிந்து, வைத்திய சாஸ்திரத்தில் பாண்டித்தியமடைந்து, மஹா மேதாவியாய் சந்யாசி ஆசிரமமே சிலாக்யமென்றறிந்து, கல்யாணம் செய்துகொள்ளாமல் ஹிமாசலத்தருகே போய் தனக்கு ஒரு ஆசிரம மேற்படுத்திக்கொண்டு அங்கே யோகாப்யாசம் செய்து அத்வைத மத கிரந்தங்களையே அப்யசித்து நிஷ்டையிலிருந்தார். வெகு வருஷங்கள் வரை ஸ்வாமி ராம் தீர்த்தர் இம்மாதிரியாகவே காலங்கழித்து 1906-ம் வருஷக் கடைசியில் அந்தப் பக்கம் பெருவெள்ளம் உண்டானபோது கங்கா நதியில் மிதந்துகொண்டே போய்விட்டார். இதன்பிறகு இவர் போன இடமே தெரியவில்லை. பரிபூரணமாய் விட்டாரென்று நிச்சயப்படுத்தலானது.

***

**ஒருவர் கூறுகிறார்:**—உயர்வு தாழ்வுகள் கல்வியாலும் செல்வத்தாலும் வருவன. கற்றோன் எக்குடி பிறப்பினும் அவனை எங்குமே 'வருக' என்று எதிர்கொள்வர். கல்வியில்லாத செல்வவான் பஞ்சமனேயாயினும், அவன் மீது பாடல்கள் கூறிப் பரிசுபெற வித்வான்கள் சித்தமாய்விடுவர். கல்வியோ

---

அந்த மதத்தில் ஒன்றுமில்லை யென்று இந்த மதஸ்தர்கள் கூறி உளற, அவ்விதமே இந்த மதத்தில் ஒன்றுமில்லை யென்று அந்த மதஸ்தர்கள் கூறி மகா கண்டு விட்டதாகப் பழிக்கிறார்கள். இதற்கு ஒரு முடிவும் இல்லை!

செல்வமோ இரண்டிலொன்று இருந்தாலன்றி இவ்வுலகிலுள்ளவரை எம் மதத்திலிருப்பினும், மதம்விட்டு மாறினும் உயர்வடைய முடியாது. குணம், கல்வி, மனோபக்குவம் இவற்றால் இகபரங்களில் உயர்த்தப்படலாமேயன்றி, பிறமதம் புகுந்துவிட்ட ஒன்றினால்மட்டுமே உயர்த்தப்பட்டுவிட்டதாக எண்ணுதல் வீண் பிரமையே. சந்தேகப் பேய்களும், ஆக்ஷேபங்களும், இடறு கட்டைகளும், வழுக்கிக் கீழே தள்ளும் இடங்களும், தெளிவான நீரும், பால்மயமான நிலாவும், அத்துடன் கூடிய கனத்த இருளும் எந்த மதத்திலும் உண்டு. பாலர் வகுப்பில் வாசிக்கும் சிறுவன் பி. ஏ. வகுப்புப் பெஞ்சியிற் போய்க் குந்துவது சுலபம். ஆனால், அவன் பி. ஏ. ஆகிவிட முடியாது. வருந்தி, மனத்தை ஒடுக்கி முயலாது சுகம் பெறும் வழி இகத்திலுமில்லை, பரத்திலுமில்லை, எம்மதத்திலுமில்லை. முயற்சியைப் பொறுத்து யாவும் அமையும். சும்மா சும்மா கிடைத்துவிடாது "சுகம்!"

***

**இன்னொருவர் கூறுகிறார்:**—துர்விஷயங்களை யனுஸரிக்கும்படி ஈசுவரனே நேரில் வந்து போதித்தாலும் நான் செவி கொடேன். எக்காரணங் கொண்டாகிலும் சரி, என் புத்தியை எப்படிக் கலக்கினாலும் சரி, நான் பிறந்த மதந்தைவிட்டு அன்னிய மதம் புகேன். நல்விஷயங்களைக் கொள்ளும்படி நாரதமன் கூறினாலும் அதை யேற்றுக்கொள்வேன். எது நன்மை, எது கெடுதல் என்பதைப்பற்றி என் மனஸ்ஸாக்ஷி எனக்கு நன்றாய்த் தெரிவிக்கிறது. இதற்காக வேத புராணங்களையும் இதிகாஸங்களையும் மறுபடி நான் பார்க்கவேண்டிய அவசியமில்லை. மத ஸம்பிரதாயங்களிற் கூறப்படும் விஷயங்கள் ஒன்றுக்கொன்று நேர்விரோதமா யிருக்கின்றன. மனுஷ்யர்கள் பற்பல மதஸ்தர்களாயும் ஜாதிகளாயும் பிரிந்து, தத்தம் கொள்கைகளே சிரேஷ்டமென்று நூலில் எழுதி வைத்திருக்கிறார்கள். ஆகவே, என் மனஸ்ஸாக்ஷியானது ஒன்றையோ, ஒரு கக்ஷியையோ அனுஸரித்தும், மற்றொன்றையோ, மற்றொரு கக்ஷியையோ விரோதித்தும் பக்ஷபாதமாய்ப் பேசாமல், என் ஜன்மம் கடைத்தேறும்படியான நீதி ஞான மார்க்கங்கள் எவை எவை யுண்டோ அவற்றை மட்டும் எனக்குப் போதிக்கின்றது. இதனாலே தான் உலகத்தாரின் வார்த்தைகளை நான் காதில் போட்டுக்கொள்ளுகிறதில்லை. எவர்களையும் துவேஷிப்பதுமில்லை. என் மனஸ்ஸாக்ஷிக்குப் பிரியமான மார்க்கத்தில் நான் போகிறேன். பல பெரியோர்கள் இவ்வுலகத்தைவெறுத்து வனத்துக்குப் போய்த் தவம் புரியச் சென்றதேன்? ஜன—மத்தியிலிருப்பது சித்தம் பேதிக்க வைக்குமென்று கருதியதே காரணமென் றெண்ணுகிறேன்.

***

"ஸ்ரீராமஜெயம், ஸ்ரீ கிருஷ்ண சகாயம்" என்று ஜனங்கள் சொல்லுகிறார்கள். ஏன்? ஸ்ரீராமனை பஜிப்பதால் சர்வ ஜெயங்களு முண்டாகுமாம். ஸ்ரீ கிருஷ்ணமூர்த்தியை உபாசிப்பதால் சகல உதவிகளும் கிடைக்குமாம். ஸ்ரீ இராமப் பிரபுவானவர் இராவண சம்ஹாரம் செய்து அயோத்திக்குத்

---

*காற்று நுழையாத இடத்தில்கூட முனிசிபல் வரி நுழைந்துகொள்ளுமாம்! முனிசிபல் பில்லைச் சேவகனுக்கு இருக்கிற சட்டையும் தலைப்பாகையும் கூட முனிசிபல் சேர்மனுக்கில்லையாம்! ஸர்வாதிகாரி அந்த சேவகன் தானும்!*

திரும்பி வருகையில் அவரது வரவை நிரீக்ஷித்துக்கொண்டிருந்த பரதன் எல்லோரும் தன் அண்ணனுக்குத் தொண்டு செய்வதையும், அடுத்த தம்பியாகிய லக்ஷ்மணன் எப்போதும் ஸமீபத்திலிருந்து ஊழியம் செய்வதையும் கண்டு, "ஐயோ நாம் இத்தனை நாளாக ராமமூர்த்திக்கு சுசுரூஷை செய்யும் பாக்கியத்தைப் பெறுமற்போனேமே யென்றெண்ணித் துக்கமடைந்தார். ஏதேனும் செய்யவேண்டிய ஊழியம் பாக்கியுண்டோ வென்றுலோசித்தார். எல்லோரும் இராகவப் பெருமானுக்குத் தொண்டு புரிகின்றனர். இவர் செய்யக்கூடிய ஊழியம் ஒன்றுமில்லை. கடைசியாக, அவர் நடந்துவரும் வழியில் முளைத்துள்ள புற்பூண்டுகளைப் பிடுங்கி செப்பனிட்டாராம். இப்படி பரதாழ்வாரே தம்முடைய திருக்கையால் தொண்டு புரிந்திருக்க, அற்பர்களாகிய நாம் அவரை ஸதா தியானிப்பது அவசியமன்றோ? எவன் ஸ்ரீராமஸ்மரணை செய்கிறனோ அவன் ஸகல ஜெயங்களையும் அடைகிறனென்பது நிச்சயம்.

சாமநாலு வேதமும் சகலசாத் திரங்களும்,
சேமமாக வோதினும் சிவனைநீர் அறிகிலீர்,
காமநோயை விட்டுநீர் கருத்தோடுங்க வல்லிரால்,
ஊனமற்ற காயமா யிருப்பனீச னுண்மையே.

---

## வழக்கத்தின் போக்கு!

சிலருக்கு மூக்குப் பொடியைக் கையில் எடுத்து வைத்துக்கொண் டிருந்தால்தான்—காரண காரிய சம்பந்தத்தோடு சரியாய்ப் பேசமுடியும். சிலருக்கு மூக்கிலுள்ள சளியை எடுத்து இருவிரலாலும் பதம் பார்த்துக்கொண்டே பேசுவதில் அதிக விருப்பம். சிலர் சட்டைப் பொத்தானைத் திருகிக்கொண்டே உரையாடுவர். வேறு சிலர் பேனவையோ அல்லது பென்ஸிலையோ கையில் வைத்து அதனுடன் சரசமாடிக்கொண்டே வார்த்தையாடுவர். சிலருக்கு எது அதிகம் நாறுகிறதோ அதுதான் சுகந்தமான வாசனையாகத் தோன்றும்! சிலருக்குக் கண்களில் ஜலம் வரும்படி அவ்வளவு காரமாயிருந்தால் பரம திருப்தி! தகாத காரியங்களால் நோய் வருமே எனில், அதைப் பிறகு பட்டுக் கொள்ளலாமென்பர். வழக்கம் கொடியது. பிறகு விடாது.

நாளை விரதத்திற்கு இன்று தோசைக்கு மாவு அரைக்கட்டுமா என்கிறள் மனைவி. கணவனே தனக்காகவே மாவரைப்பதாக எண்ணுகிறன். அவன் மனைவியோ நாளை தன் வீட்டார் வருவார்களென்றே மாவரைக்கப் போகிறள்! அதை வெளியிட்டுக் கொள்வதில்லை! இப்படியே ஒவ்வொன்றும்!

அமிர்தகுணபோதினி

சுக்கில௵ மார்கழி௴ 1௨

# அநுபவித்து உணர்வதிலுள்ள சுவை நயங்கள்.

## V

ஆநந்திக்கும் சுவைகள் எத்தனையோ உண்டு புவிமீது. அவற்றிலெல்லாம் தலைநாயகம் வாய்ந்தது தமயனின் அன்பு. தந்தைக்குப் பிறகு தமயனே தலைவன்; அவனே துணைவன். தந்தை யுணர்த்திய பாசமும் அன்பும் தமயனிடத்திலும் தழைத்தோங்கும். தலைக்குமேல் தலையிருக்கிறதா? தமயனுக்கு மிஞ்சிய தலைவர் ஏது? தலைக்கு முடியோ?—காலுக்கு முடியோ? எல்லா மரியாதையும் தமயனுக்கே தகும். தலைக்கு மேலே கை உயருகிறதானாலும் தலைக்குக் கீழாகத்தான் கையைப் பொருத்தியிருக்கிறது. வீட்டுக்கு அதிகாரி அண்ணனே. தலை இருக்க வால் ஆடுமா? தலைக்குத்தலையே நாயகம். தலையாலே மலையைப் பிளக்கக்கூடிய சக்தியும் தமயனுக்கு உண்டு. அந்த ஒரு சக்தி அவனுக்குப் பிறகு அந்தக் குடும்பத்தில் யாருக்கும் வருவதில்லை. அந்த சக்தி அவனோடு போனதுதான். அண்ணன் இருக்குமளவும் அந்தக் குடும்பத்திற்கு எங்கும் மதிப்பு அவரவர்களையும் சமாதானப்படுத்தி அடக்கி யாண்டு தலைமை செலுத்துவது அண்ணன் வேலை. அண்ணனிடத்தில் ஆறுமாதம் வாழ்ந்தாலும் அண்ணியிடத்தில் அரைநாழிகை வாழலாமா என்று தம்பியும் தங்கையும் கோபித்துக்கொண்டாலும், தனது துஷ்ட மனைவியையும் அடக்கி, தம்பியையும் தங்கையையும் சாந்தப்படுத்தி, எல்லோருடனும் ஒன்று சேர்ந்து வாழ்வது தமயனிடத்திலுள்ள ஒரு ஒழுங்கு. வீட்டுக் கவலை அண்ணனுக்கன்றி வேறு யாருக்கு? அண்டை வீட்டுச் சுப்பிக்கும் எதிர் வீட்டுக் காமாட்சிக்குமா கவலை? அண்டர் எப்படியோ தொண்ட

---

இன்றைக்கு ஒருவனை நொண்டி யென்று பழித்தால் நாளை நாம் நொண்டியாவதற்கு நெடுநேரம் செல்லாது. நமது வாழ்நாள் முழுதும் அங்கவீனமில்லாமல் இருந்துவிடுவோமென்பது நிச்சயமில்லை. அடுத்த நிமிஷத்தில் வரப்போவதென்னவோ! இரவு படுத்தவனுக்குக்காலையில் காதுகேட்கவில்லை!

ரும் அப்படியே; அண்ணன் எப்படியோ அவன் வீடும் அப்படியே. ஆயிரம் பனையுள்ள அப்பனுக்குப் பிறந்தும் பல்லுக்குத்த ஒரு ஈர்க்கு இல்லையென்பது குடும்பத்தின் உள் நிலையானாலும், அதையும் மூடி மறைத்துக் குடித்தனத்தைக் கௌரவமாய் நடத்திக்கொண்டு போகிற அண்ணனுடைய பொறுப்பு ஒரு பெரிய நிர்வாகமே தான். ஆயிரம்பொய் சொல்லி ஒருதாலி கட்டு என்றபடி குடும்பத்திலுள்ள அவரவர்களுக்கும் தன்னாற் செய்யப்படவேண்டிய கடமைகளையும் கிரமப்படி செய்து முடிப்பது அண்ணன் காரியம்.

***

அண்ணன் இருக்கிறவரையில் தம்பிக்கு எந்தத் தலைச்சுமையும் இல்லை. கவலைகளை அண்ணன் தலையில் ஏற்றிவிட்டுத் தான் உல்லாஸமா யிருக்க முடிகிறது. எந்த சங்கதிக்கும் அண்ணனைக் கேட்டுச் சொல்லுகிறேன் என்று தப்பித்துக் கொள்ளலாம். அண்ணனுக்கு அது பிரியமில்லை என்று பழியை அவர்மேல் போட்டுவிட்டுத் தான் நல்ல பிள்ளையாகி விடலாம். அந்த நாளில், பரதன் மாமணிமுடி சூடத் தனக்கு தந்தை தந்த வரத்தையும் மதிக்கவில்லை; தன் குலகுருவாகிய வசிஷ்டர் சொல்லையும் கவனிக்கவில்லை; ஈன்ற அன்னையாங் கைகேசியின் வேண்டுதலையும் எதிர்த்து "அண்ணன் காய்கனி உண்ணவும்—நாம் அமுத விருந்து பண்ணவும்—எண்ணும் அரசாட்சி இனி நமக்குமா?—இப்புவி என் புயம் ஒப்பிச் சுமக்குமா?" என்று மறுத்தான். ஆனால், தன் தமயனுக்கு மட்டும் உட்பட்டு நடந்தான். அந்தப் பரதனுக்கு இவ்வுலகில் யாவற்றையும்விட தன் தமயனொருவனே பெரியவனாய்த் தோன்றினான். அதற்கேற்ப, சத்தியம் பொறுமை யன்பு சற்குணவிரதம் பத்தியும் உருவங்கொண்டு பார்மிசை வந்ததென்ன அந்தத் தமயனும் விளங்கினான். பரதன் தன் அண்ணனைக் காணக் கானகம் வர, அவன் படையெடுத்து எதிர்க்க வந்தானென்று லக்ஷ்மணன் பேதமாய் நினைத்துக் கொண்டு தன்னுள்ளே சீறிச் சினம் மிகுகின்றான்.

இலக்ஷ்மணன்:—இப்போதே ஒரு உத்தரந் தாரும்
இதோ அண்ணா சென்று பதாதிப் பரதனைக்
குப்புற வீழ்த்தி யடிக்கிறேன் கொண்ட செங்
கோலைப் பிடிங்கிநும் காலுக்கு வைக்கிறேன் (இப்போ)

இராமர்:—எங்கே பரதன் பின்னெங்கே பதாதி
எதிர்த்துனைச் சண்டைக் கிழுக்கிறது தம்பி
அங்கென்னவோ கண்டு பொங்கித் துடிக்கிறாய்
ஆதிக்கோபத்தையே சாதிக்கிறாய் தம்பி (எங்கே)

---

ஆவலோடு அவசியம் பதில் தருவார் என்று எதிர் நோக்கிய இடத்து ஏதுவுங் காணாது ஏமாற்றமெனில்———மனமே சஞ்சலம் எழுதற்பாலதோ?

இலக்ஷ்மணன்:—காட்டுக்குப் போனவன் வீட்டுக்கு வந்தாலும்
கைக்கொள்ளுவான் பட்டம் அக்ரமமா யென்று
தாட்டிகக் கைகேசித் தாயேவ லாலிதோ
தண்டுடனே பரதன் வந்திருக்கிறான் (இப்போ)

இராமர்:—இத்தனை தூரம் பரதன் நமைத்தேடி
எதுக்கு வந்தவன் யோசிக்கவில்லை நீ
அத்தினங் கேகய நாட்டிலிருந்தான் அ
யோத்திக்கு வந்தான் பார்த்துக்கொள்ள வந்தான் (எங்)

"பாரசேனு சைன்யப் பயணமாய்ப் பரிதாபமாய் வந்திருப்பான் பரதன். நம்மைப் பங்கப்படுத்த எண்ணங்கொண்டவன் அல்லடா தம்பி. லக்ஷ்மணு! உன்னிலும் என்னிடம் அன்பு அதிகம் படைத்தவன் அவன் அல்லவா? பரதன் சேனை படையெடுத்து வந்து காட்டிலும் பிழைக்க வொட்டாமல் நம்மைச் சித்ரவதைசெய்யப்போகிறதாய்க் கனவு காண்கின்றாயா?" என்று சொல்லி லக்ஷ்மணனைத் திருத்துகின்றார். அத்தருணம் பரதன் "அண்ணு" என்று அலறியவண்ணம் பாதகமலங்களில் வந்து விழுகின்றான். இராமர் பரதன் தன் காலடியில் வீழ்ந்ததை ஒரு பார்வையிலும், லக்ஷ்மணனை ஒரு பார்வையிலும் பார்த்து மௌனமாய் லக்ஷ்மணனின் தவறான எண்ணத்தைத் தமது கண்ணேக்கால் குறிப்பிக்க, லக்ஷ்மணன் நாணி ஒருபுறமாய் ஒதுங்குகின்றான். பின், பரதனை இராமர் வாரியெடுத்துத் தழுவுகின்றார். இங்கு தமயனின் கம்பீரத்துவமான பெருந்தன்மை புலனுகின்றது. எங்கணும் அன்பு பரவிய தமயனின் ஹிருதய விசாலத்தினை இக்காட்சியின் மாட்சி சூசிப்பிக்கின்றது.

***

எந்தக் காரியத்திற்கும் தமயனே முன்னிற்க வரும். தமயனின் யோசனைதான் எதிலும் முந்தி வந்து நிற்கும். எந்த யோசனைக்கும் அண்ணன் குடும்பத்து லாயர் போலாவான். தமயனுக்குத் தாம்பூலம் வைத்தால் அந்த வீடு முழுமைக்கும் வைத்தது போலாம். தன் வீட்டில் இருப்போர் ஒவ்வொருவரின் குணங்களையும் தமயன் அளவெடுத்து அறிந்திருப்பான். கணவனை இழந்த சகோதரி தன் வீட்டுடன் இருந்தால், தனக்குப்பின் அவள் மற்றதம்பிகளை எதிர்பாராது தன் கையில் ஏதேனும் வைத்துக்கொண்டு உண்ணுதற்கும் ஒருவழி செய்துவிடுவான். இவ்விதமே அவரவர்க்கும் ஒவ்வொரு வித ஏற்பாடும் நடத்துவான். யாவர்க்கும் பொதுவாகிய மனுஷ்யனவன். அண்ணன் இருக்கிறார் என்றால் அது ஒருபெரிய கௌரவம். தான்

---

நேற்றிரவு நிலாவில் நடு ஆற்றில் உட்கார்ந்து கூட்டமாய்ப் பேசிவிட்டு வந்தோம். காலையில் பார்க்கும்போதோ பெரு வெள்ளம் ஓடுகின்றது! நேற்றிரவு பேசிச் சென்றவன் இன்று காலையில் அந்தோ! சவமா யிருக்கிறான்!

பிறப்பதற்கு முன்னரேயே தோன்றவேண்டியவன் அண்ணன். தான் ஜனித்த பிறகு பெறும் பாக்கியமல்ல இது. பல தம்பிகளைப் பிறகு பெறலாம். ஒரு அண்ணனைப் பின்னர் பெறஇயலா. அண்ணனிட்ட ஏவல்களைச் செய்வதில் தம்பிக்கு எவ்வளவோ உற்சாகம். எத்தனையோ பிழைகளும் தவறுகளும் அண்ணனால் திருத்தப்படும். அண்ணாவைப் பெருதவர் மனம் புண்ணும். உடற் பிறப்பில்லாத உடம்பு பாழாம். உடற்பிறப்பு போனதும் தோள்வலியும் போம். அண்ணாவால்தான் குடும்பத்தில் இத்தனை அமரிக்கையும் அழகும்.

***

இனி என் சிறு அண்ணனே?:—அவன் என் முன் பிறந்தோன்; இளமையிலென்னைத் தன் தோள் மார்பில் அணைத்துத் திரிந்தான்; காலை மாலையில் நான் கதறியே யழுதால் பாலைப் புகட்டிப் பரிவோடுங் காப்பான். கதைகள் சொல்லிக் களிக்கச்செய்து யான் இதழுறுவதையே என்றும் விரும்புவான். என் குறுகுறு நடையிலும் குறுநகையதனிலும் பெருமகிழ்வுற்றுப் பேசும், சிரிக்கும், சிற்றுணவு உதவும், தான் செல்லுமிடமெல்லாம் பற்றோடு என்னையும் இட்டுப்போகும். ஆடலும் பாடலும் அன்போடு பேசலும் ஓடலும் கற்பித்து உவகை மிகவும் கொள்ளும். என்னிடம் குற்றம் காணில் கடிந்து அன்போடு மொழிந்து திருத்தும். மது மலர் கொணரும். மாங்கனிகள் தரும். புதுப்புதுச் சட்டை பட்டங்கள் பொம்மைகள் அளித்திடும். தங்காய்! தம்பி! என்று தயவோடு பேசும். விடிய விடியப் படிக்கச் சொல்லும். படியாவிடினே அடிக்கும்; வையும். கவியும் கணக்கும் கலந்து போதிக்கும். நவநவக் கதைகள் நாடொறுஞ் சொல்லும். கண்ணே போலக் காத்து நின்றதென் அண்ணன் என்னை அன்புடனே. ஆதலின் அவனை நேசிப்பன் யான் அன்போடென்றுமே. பெரிய அண்ணனும் சிறு அண்ணனும் வாழ்க.

## II

இனி, தமக்கையின் அன்போ தமயனின் அன்பிலும் உயர்ந்தது; களங்கமற்றது. தாயாதித் துன்பம் இல்லாதது. "உடன் பிறந்தே கொல்லும்வியாதி" என்று உடன்பிறந்தாருக்குக் கூறியிருப்பினும் அது ஸகோதரர்க்கே யன்றி ஸகோதரிகட்கு அல்ல. தந்தையன்பு தாய்போன பின்பு மாறலாம். தமயனின் அன்பு அவனுக்கு மனைவி வந்தபின் மாறலாம். ஆனால், தாயின் அன்பும், தமக்கையின் அன்பும் எக்காலத்தும் ஒரே நிலையினதாகும். அது மாசுபடுவதில்லை; மறைவதுமில்லை. தாயின் அழகிய உருவம் தமக்கையினிடத்துப் பிரதி

---

வீடுவந்ததும்—"கடிதம் வந்ததா ?" என்று விசாரிக்கையில்—"இல்லை" —என்று பதில் கிடைத்தால் எவ்வளவு வருத்தம்? எத்தனை ஏமாற்றம்?

பலிக்கும். தாய் உடுத்திய சேலையைத் தமக்கை யுடுத்தியிருக்கும் காட்சி கண்கொள்ளாக் காட்சி. தமக்கை இரண்டாவது தாய். தாய் காட்டிய அன்பில் ஒரு சிறு துளியுங் குறையாமல் தமக்கை காட்ட முடியும். தமக்கையுள்ளவன் தைரியமுள்ளவன். மற்றவர் சொல்லைக் கேளாவிடினும் தமக்கையின் சொல்லைக் கேட்கவே வரும். தமக்கையின் உயிர் தன் இளையவர்களிடம். தமக்கை தன் கையால் கூழ் வார்த்தாலும் அது ஒரு தனிக்கௌரவம்; அது தாய் வார்த்ததற்கே சமானம். தம்பியின் குழந்தைகளிடத்துத் தமக்கை கொள்ளும் பிரீதியும் ஒப்பற்றதே. அக்குழந்தைகளை வளர்ப்பதும் அவளே. தன்னை அதிகாரம் செய்து நடத்தும் ஒரு தமக்கையிருப்பது பெரிய அதிர்ஷ்டவசம். எந்த சங்கதிக்கும் தமக்கையினிடம் யோசனை கேட்கலாம். எவர் எதிரிலும் தமக்கையின் கரம் பற்றலாம். தானும் தமக்கையும் ஒன்றாய் ஒரு பாயில் உறங்கலாம். தன் அதிகாரத்திற்கெல்லாம் தமக்கை உட்படும். ஸகோதரி பெற்றெடுத்த மக்களுக்கோ தான் தாய்மாமன். ஸகோதரியின் குமாரத்திகளை வழித்துணைவியாகப் பற்றி விழிக்குச் சமமாகவும் கொள்ளலாம். தனக்கு வந்த ஆபத்தில்-பிணியில்-தமக்கையின் உடல் பதறுவதுபோல் மற்றவர் தேகம் துடிக்காது. தமக்கை போயின் தன்கைப்பலம் போய்விடும். தன் தாய்க்குத் துணை தமக்கை. அவளது விலகிய சேலையை மறைக்கத் தமக்கைக்கு முடியும். தன்னால் ஆகாதது தமக்கையால் ஆகும். தமயனைப் போன்று தமக்கையும் தனக்கு முன்னரே ஜனித்திருந்தால்தான் அந்தப் பாக்கிய சிலாக்கியத்தினைப் பற்றுதல் கூடும். தான் பிறந்த பின்பு எத்துணைச் செல்வங்கள் பெறினும் ஒரு தமக்கையைக் கொள்ளமுடியாது. அது இந்த ஜன்மத்திலில்லை யென்றே தீர்ந்துவிடும். தமக்கையில்லையே யென்று வேறொரு நங்கையைத் தமக்கையாகக் கொண்டாலும் அது பொருந்திவராது; ஊரும் நாடும் வீடும் அதை ஒப்பாது. அந்த அன்னியப்பெண்ணோடு தமக்கையென்று சொல்லிக்கொண்டு ஒரு பாயில் உறங்கமுடியாது. போட்ட பாயைச் சுருட்டடி யென்பார்; பழிப்பார்; பலபல பகர்ந்து பகைப்பார். உடன் பிறப்பான தமக்கையின் ஒன்றுபட்ட உள்ளம், தானே ஏற்படுத்திக் கொண்ட ஒப்பாரித் தமக்கைக்கு ஒருபோதுமே வாராது. இயற்கைக்குள்ளது செயற்கைக்கு ஏது? வங்கதேசத்து நூலாசிரியரொருவர்,

"பெண்ணலங்குன்றா அருமைச் சோதரி! யான் பெறற்கரிய பேறே! நின்னை எண்ணிடுமுன் என்னே! என் இருவிழிக்கும் முன்னேநீ இருக்கின்றாய். என் கண்மணியே!* * * * * * * * * சிறியேன் கலங்கிச்சோர விண் விரும்பி நீ புகுந்த விதம் என்னே? யான் அறிய விளம்புவாயே!"

என்றும்,

---

ஒருவர் வீட்டில் புசிக்கையில் முதலில் உண்டாவது இயற்கையான உத்தம நினைவு. பின்பே இது மாறிச் செயற்கையான பேத குணமாகிறது.

"தம்பி!" என எனை அழைப்பார் இனியின்றித் தமியேனைத் தனியன் ஆக்கி
* உம்பர் உறு மாதரசே! பன்னூல் யான் இயற்ற எனக்குதவி செய்தெற்
† கிம்பர் புகழ் உறச்செய்தாய்! இனி என்நூல் திருத்துவர் யார்? என்நூல் நோக்கும்
அம்புவியோர் மகிழ்வினு‡மீ மகிழ்வெனக்கு நின்மகிழ்வால் அன்றோ? அக்கா! என்றும்,

* உம்பர்=விண்ணுலகு. † இம்பர்=இவ்வுலகு. ‡ மீ=மிக.

அக்கா! நின் சொற்படியே நின்மகளை யான் மணந்தேன்; அன்பு கல்வி
மிக்காய்நின் சொற்படியே யான் பலநூல் களைஎழுதி வெளியிட் டேன்; மே
தக்கோய்! நின் சொற்படியே * * * * * * * யான் தழையச் செய்தேன்.
¶ இக்கார் நின் சொற்படியே * * * * நாடகம் இப்போ தெழுதி யுள்ளேன்!

¶ இக்கு ஆர்=கரும்பு போன்ற.

என்றும், தமது தமக்கையைக் குறித்துப் பிரலாபமாய்க் கூறி யிருக்கின்றார். தமக்கை யுள்ளவரை வீட்டில் கொண்டாட்டமே. தனக்கு இரண்டு தாய்மார் இருந்தது போலாம். தமயனும் தமக்கை யும் அன்பின் உருவங்களாவர்; தெய்வத் தோற்றங்களாவர்; தனது பூர்வ புண்ணியம் பலிக்கக் கிடைத்தவராவர்; பெறற்கரிய அருநிதிக் கொப்பாவர். அவ்விருவரிடத்தும் அன்பு பெருகிக் குலாவி அனு பவித்து உணர்வதிலுள்ள சுவை நயங்களைச் சொல்லவும் கூடுமோ? தமயனும் தமக்கையும் படைத்தல் மட்டும் போதாது; அதனை அனு பவிக்கும் ஆற்றலும், அதற்கான பாக்கியமும், அன்பின் "பரிசுத்த"மும் பெற்றிருந்தால்தான் முடியும். அது அவரவர்தம் அதிர்ஷ்டம்! இனி தம்பி தங்கைகளை அடுத்த ஸஞ்சிகையில் வரவேற்போம்.

## அதற்குள் மற்றொரு முடிவா?

ஒரு பண்டத்தை அது இருந்த இடத்தைவிட்டு வேறிடத்தில் மாற்றிவைத்து, அந்தப் புதிய இடம் மறதி யாய்விடும்போது, பழைய இடத்திலேயே அதை வைத்திருக்க லாகாதாவெனத் தங்களை நொந்துகொள்வோர், தாங்கள் வைத்த புதிய இடம் ஞாபகத்திற்கு வந்ததும், அந்தப் புதிய இடமே சரியான இடமென்றும், அந்தப் பண்டம் அப்புதிய இடத்திலேயே இருக்கட்டுமென்றும் முடிவு செய்கிறார்கள். சற்று முன்பு ஏன் மாற்றிவைத்தோமென்ற எண்ணம்; இப்போதோ மற்றொரு தீர்மானம். இந்த நிமிஷம் செய்த உறுதி மறு நிமிஷத்தில் இல்லாது வேறுபட்டு விடுகின்றது.

# சந்தேகஸ்தர்கள் !

சந்தேக மனிதரால் ஓயாத சஞ்சலம்.
சிரித்தபடியே பேசி விலகி, உடனே
அனுப்பி விடு.
மீண்டும் வலிய வரின் அது ஒரு கபடம்.
குள்ள நரிவருவது குறைவதேமிக நலம்.
நீ விழித்திருப்பினும் ஏமாற்றி விடுவர்.
சந்தேகியின் அன்பு கழுத்துக்குக் கத்தி.

| | |
|---|---|
| அயோக்கி | மிக மிகவே நெருங்கித் தொடர்வார். |
| யரிடமே | அடிக்கடி வந்து அன்புடன் தங்குவார் |
| சந்தேகம் | உன் தொழில் மர்மம் மிக ஆராய்வார். |
| உதிக்கும். | ஏவிய வேலை எதுவும் உடன் செய்வார். |
| அவர் உறவு- | உன்ஒவ்வொரு காரியமும் கவனிப்பார். |
| நட்பு-துணை | பெண்களிடம் அதிகம் பழகுவார். |
| அபரஞ்சிச் | சமையலறையிலேயே ஸதா ஸஞ்சாரம். |
| சிமிழில் | பெண்கள்-நூல்கள்-சொத்து-ஜாக்ரதை. |
| நஞ்சு. | உன் பிழைப்பு-மானம் காத்துக் கோள். |

அற்ப சகவாசம் பிராண சங்கடமே.

---

1. சந்தேகியைத் தான் வெகு நல்ல மனிதனென்று நம்பி மோசம் போவார்கள். உண்மையான மனிதனுக்கு அவ்வளவு தளுக்கு—தந்திரம்—பிரிய நடிப்பு—வேஷம் போட்டுக் காட்டத் தெரியாது.

2. உடை ஆடம்பரங்கள் சந்தேகியிடம் அதிகம். அது எவரையும் மயக்கும். தன்னை சந்தேகிக்கிறார்களென்று தெரிந்தாலும், சந்தேகி அதை அறியாதவன் போலவே கொஞ்சி, இன்னும் அதிகமாய் உட்பட்டு நடப்பான். நமக்கு வெகு துணையானவனாக இருப்பான்.

3. சந்தேகி ஒரு காரியமாகத் தான் அடிக்கடி வருகிறுன். ஆனுல், வேறெந்தக் காரியத்துக்கோ வந்ததுபோல ஒவ்வோரு தடவையும் ஒவ்வோருவித போய்யான சங்கதி சோல்லிக்காட்டிக் கோள்வான்.

4. பிறருக்கு உழைப்பதிலும், சமயத்துக்கு உதவுவதிலும், சோன்னதேல்லாம் செய்து முடிப்பதிலும் சந்தேகியைப்போன்ற சுறு சுறுப்புள்ள மனிதன் உலகத்தில் இதுவரை பிறந்ததேயில்லே!

5. அதிக உறவைக் காட்டிப் பெண்களிடம் பேச்சு பிடிப்பது சந்தேகியின் முதல்தரமான வஞ்சகம். சந்தேகி தனது அதிகப் பேச்சு களால் உன் வியாபார ரகசியங்களேயும் அறிந்துகோள்ள முயலுவான்

6. கணவனிடம் சோல்லாத ஒரு சங்கதியைச் சமையற் கட்டில் சோல்லப்போவது—பெண்களே வசப்படுத்த சந்தேகி செய்யும் தந்திரம். வேலேக்காரனே ரகசியமாய் நேசிப்பது சந்தேகியின் வேலே.

7. இரவில் வருவதும், உறங்குவதும் சந்தேகியின் வேலே மற்றவர் தூங்குகையில் சந்தேகி விழித்திருக்கலாம். கற்போ—பணமோ—நகையோ—எதுவோ அபகரிக்கப்படலாம். ஆகவே, எச்சரிக்கை!

8. பேச்சு ஆடவர்களிடம் மட்டு மிருக்கட்டும். சமையற் கட்டிலும் பெண்களிடமும் என்ன பேச்சு? யோக்கியன் இது செய்வானு?

9. உடையவன் இல்லாத சமயம் வீட்டிலும் மேஜையிலும் மேதுவாக ஆராய்வதும், அகப்பட்டதைச் சுருட்டுகிறதும் குள்ளநரியின் வேலே. உள் ரகசியம் அறியவந்த பூனேயின் திருட்டுக் காரியம்.

10. சந்தேகி வரும்வேளே வீட்டில் யாருக்காவது ரகசியத்தில் தேரிந்திருக்கும். அதை மற்றவர் அறியார். கூடவே குலாவி குழியில் தள்ளுவது சந்தேகியின் சமர்த்து. எவராவது வரின் உடனே தான் பேசிய பேச்சை நிறுத்தி வேறு பேச்சு எடுத்து, அதோ கோக்கு பறக்கிறது என்பான். ஒரு நிமிஷத்தில் பெண்ணே வசப்படுத்துவான்.

11. எவரை நீ சந்தேகித்து விட்டாயோ, அப்படிப்பட்டவர்களிடம் மீண்டும் நல்ல அபிப்பிராயம் கோள்வதானுல், சந்தேகி உன்னே நன்ருக மயக்கி விட்டான் என்பதே அதன் முடிவான அருத்தம்.

12. வீட்டுப் புருஷர்கள் அறியாதவாறு, பெண்களின் கை வியாபாரமும், எஜமானன் அறியாதவாறு வேலேயாளினுடையவும் குமாஸ்தாவினுடையவும்—ரகசியவியாபாரங்களும் சந்தேகியின் மூலமாய் நடந்துகோண்டிருக்கலாம். நடத்தி நாசப்படுத்திவிடலாம்.

13. சந்தேகி ஒரு பயங்கரப் பிசாசு. சந்தேகி ஒரு கோடிய விஷநாகம். சந்தேகி சிரிப்பான முகத்தோடுள்ள ஒரு குளிர்ந்த கோள்ளி. என்ன உறவு—நட்பாயினும் சந்தேகியை உடனே விலக்கிவிடப் பார்.

சந்தேக மனிதனே! இதில் நீ எந்த வகுப்பு—?

☞ இதைப் படித்தபிறகு உன் நேஞ்சு குத்தாவிடில்—அப்போது நீ உத்தமனே தான். குத்தாததுபோல் நடிக்கிறுயோ என்னவோ?

---

# ஜோசப் மாஜினி.

## —கியாதிபெற்ற இட்டாலிய தேசாபிமானி—



ஜோசப்மாஜினி ஜினேவா என்னும் நகரத்தில் 1805-ம் வருஷத்தில் பிறந்தவர். இவர் தகப்பனர் ஒரு வைத்தியர். தாயோ புத்தி சாதுர்யத்திலும், பெருங் குணத்திலும், நல்லொழுக்கத்திலும் சிறந்தவள். தன் தாயிடமிருந்தே மாஜினி தமது நற்குண நற்செய்கைகளைக் கற்றுத் தேர்ந்து, தமது புகழை உலகில் நாட்டினர். தாயானவள் பிள்ளையை எவ்வளவு புத்திசாலித்தனமாக வளர்க்கிருளோ, அவ்வளவுக்கவ்வளவு பிள்ளை பிற்காலத்தில் மேன்மை யடைகிறது என்பதற்கு இவர் சரித்திரம் சான்று பகர்கின்றது. "விளையும் பயிர் முளையிலே தெரியு" மென்பது போல இவர் சிறுவரா யிருக்கும்போதே ஏழைகளின் கஷ்ட நிஷ்டூரங்களைக் கண்டு மனஞ் சகியார். மாஜினியார் ஆறுவயதுள்ள பிள்ளையாயிருக்கும் போது தன் தாயுடன் உலாவச் சென்ற ஒரு நாள் ஓர் ஏழை மனிதன் கோவில் வாசற்படியில் உட்கார்ந்து கொண்டு பசியால் வருந்துவதைக் கண்டார். அவ்வேழையைப் பார்த்துக் கொண்டே இவர் சற்று நேரம் அவ்விடத்தில் நிற்பதைப் பார்த்த தாய் தன் பிள்ளை ஏழையைக் கண்டு பயப்படுகிருனென்று நினைத்துப் பிள்ளையைத் தூரத்தில் இழுத்துக் கொண்டு போனுள். கொஞ்ச தூரம் போகவே, குழந்தை தாயிடமிருந்து திமிரிக்கொண்டு ஓடிப்போய் அந்த ஏழையின் மடியில் உட்கார்ந்து கொண்டு தன் தாயைப்பார்த்து அவ் வேழைக்குக் காசு கொடுக்கும்படிச் சொல்ல, அப்படியே தாயும் கொடுக்கப், பிள்ளை தன் தாயுடன் நின்றது. இதைக்கண்ட தாயும் ஏழையும் ஆச்சரியமடைந்து, பிள்ளையிடத்தில் மிக்க அன்பு கொண்டார்கள்.

அக்காலத்திய கிரமப்படி அப்போதுள்ள பள்ளிக்கூடத்திற்குத் தாய் தந்தையர் இவரை அனுப்பிப் பயிற்சி செய்விக்க, கல்வி கேள்விகளில் கற்றுத் தேர்ந்து வக்கீல் பரீட்சையும் கொடுத்தார். வக்கீல் வேலையிலமர்ந்து அதிக செல்வத்தைச் சம்பாதித்துப் பெண்டு பிள்ளைகளுடன் குதூகலமாகத் தங்கள் பிள்ளை ஜீவித்துக் கொண்டிருக்கத் தாங்கள் பார்ப்பதே சாயுஜ்ஜியமென்று தாய் தந்தைய ரெண்ணினர். நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்கிறதென்னும் பழமொழிக்கு ஓர் உதாரணமாக, இவர்கள் நினைத்த காரியம் கைகூடவில்லை. எனெனில், மாஜினி தன் பதினுறும் வயதில் ஒரு நாள் வழக்கம்போல் வெளியில் காற்ருடச்

---

ஒருவர் ஒரு காரியத்தைத் தொடங்க நினைக்கும்போது அக்காரியத்துக்கு உதவியா யிருக்கக்கூடியவருக்கு வெகு உபசாரங்கள் செய்கிருர். பின் அந்தக்காரியத்தை ஆரம்பிக்காமல் நிறுத்திக்கொள்ளும்போதோ முன்பு உபசரிக்கப்பட்டவர் தனக்கு எவ்வளவு கடிதங்கள் எழுதினுலும் மௌனமாகிவிடுகிருர்.

சென்றபோது, மிகவும் துக்ககரமான ஒரு காட்சியைக் கண்டார். அக்காலத்தில் கொடுங்கோன்மையான அரசாட்சிகளுக்கெல்லாம் கொடுங்கோன்மை கற்பிக்கக்கூடிய அரசாட்சி இட்டாலி தேசத்தின் வடபாகத்தில் நிலை பெற்றிருந்தது. இக்கொடுங்கோன்மையைத் தொலைப்பதற்கு, அந்நாட்டார் படையெடுத்து சண்டையில் அபஜயமடைய, தங்கள் தேசத்தை விட்டு அயல் தேசத்திற்கு ஓடிப் பிழைக்கும் உத்தேசத்துடன் சிலர் கடற்கரையில் கூடியிருந்தனர். இவர்களைக் கண்டவுடன் மாஜினிக்குத் தன் தேசத்தின்மீது என்று முண்டாகாத ஓர் அவா வுண்டாயிற்று. அன்று அதே க்ஷணத்தில் தன் ஆயுள்நாளைத் தேசத்தின் மேம்பாட்டிற்காகவே கழிக்கவேண்டுமென்று ஆகாயவாணி, பூமாதேவியறிய ஒரு பிரதிக்கினை செய்துகொண்டார். தான் வக்கீலாகித் தன் சுற்றத்தைச் சந்தோஷப்படுத்துவதை விடத் தேச நன்மையை நாடுவதே முக்கிய காரியமென்று கருதி அது விஷயத்தில் முழு மனதுடன் உழைக்க ஆரம்பித்தார்.

அப்போது, கார்போனேரிஸ் என்பவர்கள் கொடுங்கோன்மையை வேரறுக்க ஓர் இரகசிய சங்கம் கூட்டினர். அச்சங்கத்தில் தானும் ஓர் அங்கத்தினராகச் சேர்ந்துழைத்தார். 1830-ம் வருஷத்தில் அயலாருடைய உதவியை வேண்டக் கார்போனேரிஸரால் தூதனுப்பப்பட்டுப் போன இடத்தில் நம்பிக்கை துரோகத்தினால் எதிரி கையிலகப்பட்டுச் சவானே என்னும் கோட்டையி லடைக்கப்பட்டார். சிறையிலிருந்தும் தன் தேசத்தை மறவாமல், பிற்காலத்தில் தான் செய்யவேண்டிய காரியங்களைப் பற்றி யோசித்து யோசித்துத் தனக்குள் ஒருவிதத் தீர்மானஞ் செய்தார். அத்தீர்மானமாவது, அயலாருடைய உதவியைத் தேடுவது பிரயோசனமற்றது; தன் தேச மேம்பாடு தன் தேசத்தாராலேயே உண்டாக்கப்பட வேண்டுமென்பதே.

இங்ஙன மிவர் சிறையிலிருக்கும் போதே இவரைத் துரைத்தனத்தார் தேசப் பிரஷ்டஞ் செய்துவிட்டார்கள். இவர் எதற்கும் அஞ்சாதவராகையால் சற்றும் மனங் கலங்காமல் சிறையினின்று விடுபட்டவுடன் பிரான்சு தேசத்திலுள்ள மார்சேல்ஸ் என்ற நகரத்தில் வந்து தங்கி, அந்த நகரத்திலேயே "இளைய இட்டாலி" என்னுமோர் இரகசிய சங்கத்தைக் கூட்டினார். அதன் முக்கிய நோக்கம்:—இட்டாலி கொடுங்கோன்மையினின்று நீங்கி, பல அரசாட்சிகளாயிருப்பன ஒரே ஐக்கியப்பட்ட தேசமாகி, தேசமுழுதும் குடியரசு நிலையுற்றிருக்க வேண்டுமென்பதே. இச்சங்கத்தின் நோக்கத்தை தன் தேசத்தாருக்குப் பரவச் செய்வதற்கு மாஜினி ஒரு பத்திரிகை பிரசுரித்து வந்தார். ஆனால், இப்பத்திரிகையிலடங்கிய விஷயங்கள் கொடுங்கோன்மை யரசாட்சிகளுக்கு விரோதமா யிருந்தமையால், ராஜாங்கத்தார் பல நிபந்தனைகளின் பேரில் பத்திரிகை இட்டாலிக்குள் பரவச் செய்வதைத் தடுத்தார்கள். ஆனால் ஜனங்கள் ஒரு விஷயத்தில் ஒற்றுமையுடன் ஒரே மனத்தினரா யிருக்கும்

---

உனது குடும்பத்தின் நாலாம் பாட்டனாரை இப்பொழுது நினைக்கிறவர்கள் யார்?—அவரை மறந்ததுபோலவே உன்னையும் உன் குடும்பத்தார் மறந்துவிடுவார்கள். பிற்காலத்தில் உன் பெயரைச் சொன்னாலும் எவருக்கும் தெரியாது போய்விடும். எத்தனையோ மனிதர்களின் பெயர் மறைந்துவிட்டது!

போது, கொடுங்கோலரசர்கள் யாது செய்யக்கூடும்? இப்பத்திரிகையை ஜனங்களே வாங்கி வாசிக்க ஆரம்பித்தார்கள். இதை யறிந்து, ராஜாங்கத்தார் பிரான்சு அரசுக்குத் தெரிவித்து தங்களெல்லையில் இப்பத்திரிகை போடுவதை நிறுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்ள, இனம் இனத்தோடு என்பதுபோல் அக்காலத்தில் கொடுங்கோன்மைகளி லொன்ருகிய பிரான்சும் மாஜினி பத்திரிகையைப் பதிப்பிக்காமல் நிபந்தனை செய்து அவரையும் ஊரைவிட்டுப் போகும் படிச் செய்தது. அங்கிருந்து சுவிட்சர்லாண்டு தேசத்தை 1834-ம் வருஷத்தில் சேர்ந்து, அவ்விடத்தில் ஐரோப்பா முழுதும் குடியாசு ஏற்படுத்த வேண்டுமென்ற நோக்கத்துடன் "இளைய ஐரோப்பா" வென்னும் ஒரு சபையைக் கூட்டினர். அத்தேசத்திலிருந்து டியூக் ஆப் சாவாயின்மேல் முதன் முதல் தானே படையெடுத்துச் சென்ருர். ஆனல் அதில் அபஜயமடைந்துபோகவே, இவர் அத்தேசத்திலிருந்து துரத்தப்பட்டார். கடைசியாகச் சுய அரசாட்சிக்குத் தாயகமென்று எண்ணப்படும் இங்கிலாந்திற்கு 1837-ம் வருஷத்தில் வந்தார். வந்தபோது தன்னுயுளில் தோன்ருத மன அதைரியங் கொண்டார். ஏனெனில், இவர் இதுவரையில் ஏற்படுத்திய ஒரு காரியமாவது முடிவு பெறவில்லை; தன் வாழ்நாளை வீணிற் கழித்ததோடு தன்னை நம்பி அநேக ஜனங்கள் கொடுங்கோன்மைக்கு எதிரிகளாய்க் கிளம்பி, அதனல் அளவிறந்த சங்கடங்களுற்றும் தண்டனைகளுமடைந்து மிருக்கிருர்கள். இவையெல்லாம் யோசிக்குமளவில் மனக்கலக்கமுண்டாகி ஒரு சமயம் தன்னுயிரை மாய்த்துக் கொள்ளவும் உத்தேசித்தார். ஆனல் இவருக்குத் தன் தேசத்தின்மீதுள்ள ஆர்வமும், கடவுளிடத்துள்ள முழு நம்பிக்கையும் உற்சாகத்தைக் கொடுத்தன. இப்படி இங்கிலாந்தில் வசித்துக்கொண்டிருக்கும் நாளில் இவருக்குத் தரித்திரதிசை வந்துற்றது. இதற்கு முந்தித் தன் தகப்பனுக்குத் தெரியாமல், தன் தாய் அனுப்பிவந்த பணத்தைக்கொண்டு தான் ஜீவனஞ் செய்து வந்தார். இப்போது அப்பணத்தைக்கொண்டே தானும் தன் சினேகிதர் மூன்றுபேர்களும் ஜீவனஞ் செய்யவேண்டி ஏற்பட்டது. ஒரு தடவை தன் சட்டைகளையும், ஜோடுகளையும் அடகு வைத்துத் தானும் தன் நேசர்களும் பசியாற வேண்டி யிருந்தது. இச்சங்கடத்தோடு, இவருக்கு வரும் கடிதங்களெல்லாம் சரிவர வந்து சேருவதில்லை. இதைப்பற்றிக் கவனிக்க ஆரம்பித்து ஒரு நாள் தன் சினேகிதர்களை வைத்துக்கொண்டு தம்பேருக்கு ஒரு கடிதமெழுதி உள்ளே மணல்தூள்களை வைத்துக் கடிதத்தை மூடித் தபாலிற்போட்டார். அக்கடிதம் சரியான நேரத்தில் கிடைக்காமல் நேரஞ்சென்று வந்ததுடன் அதன் உள்ளே வைத்திருந்த மணல் தூள்கள் காணப்படவில்லை. இந்த விஷயத்தை காமன்ஸ் சபையாரிடம் முறையிட்டுக்கொள்ள, அவர்கள் ஒரு கமிட்டி ஏற்படுத்தி விசாரித்ததில் அவருடைய கடிதங்களை ராஜாங்க மந்திரிகளே பிரித்துப் பார்த்து அனுப்பியதாக ஒப்புக்கொண்டார்கள்.

---

ஒருவரைத் தேடிக்கொண்டு அவர் வீட்டுக்குச் செல்லுகையில் அவர் அங்கு இல்லாதபோது அவர் வருகிறமட்டும் பேசிக்கொண்டிருக்கலாமென்று நினைத்தால், பேச்சுக்குத் துணையாயிருப்பவர் இந்த வீண் பேச்சுகளால் தம் வேலைகள் கெடுகிறதென்று எண்ணுகிருர். ஆகவே, புஸ்தகப் படிப்புதான் சரி.

இவ்வளவு இடருற்ற காலத்தும் தன் தேசத்தை மேன்மைப் படுத்தும் விஷயத்தில் இவர் பின் வாங்கவில்லை. 1848-ம் வருடத்தில் லாம்பர்டி தேசம் கொடுங்கோன்மைக்கு விரோதமாகக் கிளம்ப மற்ற மாகாணங்களும் கலகம் செய்ய ஆரம்பித்தன. இக்கலகத்தில் மாஜினி சம்பந்தப்பட்டுழைத்தார். 1859-ல் நேப்பிள்ஸ், காரிபால்டி என்னும் ஒரு தேசாபிமானியின் வசப்பட, அதை அவர் பீட்மாண்டு ராஜ்ஜியத்தோடு சேர்த்தார். 1886-ல் ஆஸ்திரியாவும், பிரஷியாவும் சண்டையிட்டுக் கொள்ள, இட்டாலி, பிரான்சின் சினேகமென்று ஆஸ்திரியாவோடு சண்டைப் போட்டு வடக்கேயுள்ள மாகாணங்களைத் தன் ஆளுகைக்குட்படுத்தியது. இவ்விதமாக அக்காலத்தில் இட்டாலியில் ரோமாபுரி போப்பும், பீட்மாண்டு அரசனும் அரசுபுரிந்து வந்தனர். கடைசியாக 1870-ல் பிரான்சுக்கும் ஜெர்மெனிக்கும் போர் நடக்க, ரோமாபுரியின் போப்பு உதவிக்கு வைத்திருந்த தங்கள் சேனையைப் பிரான்சியர் தருவித்துக் கொள்ள, இட்டாலி தேசத்துச் சேனைகள் ரோமைப் பிடித்துக்கொண்டு போப்பை ராஜ்யத்தினின்று நீக்கி, விக்டர் எமானுவலைத் தங்கள் ஏகாதிபத்தியத்தின் ராஜனாக ஏற்படுத்தினார்கள். இக்கலகங்களிலெல்லாம் மாஜினி ஒரு தலைவராகி முழுமனதுடன் உழைத்தாரென்றும்சொல்லவும்வேண்டுமோ?

இவ்விதமாக, கொடுங்கோன்மையரசாட்சிகள் வேரறுக்கப்பட்டு, இட்டாலி ஒரே ஐக்கியப்பட்ட நாடாகச் செய்யப்பட்டது. ஜோஸப் மாஜினியின் கோரிக்கைகள் நிறைவேறின. இத்தகைய தேசாபிமானி 1872-ம் வருடம் மார்ச்சுமீ 10உ தமது 67-வது வயதில் கடவுளின் திருவடி யடைந்தார். இவ்வுலக முள்ளளவும் இவரது தேசத்தொண்டின் ஞாபகம் மானிடர் மனதில் நிலைப் பெற்றிருக்கு மென்பதற்கு ஐயமுண்டோ?

ச. முனிஸ்வாமி பிள்ளை,
"சாஸ்வதி சபை"த் தலைவர், டர்பன்.

## அந்த ஒற்றுமை பிறகு ஏது?

ஒரு மனிதனுடன் பழகுவதெல்லாம் அவனுடைய மனப்போக்கும் குணமும் தெரியாதிருக்கும் வரையில்தான். அந்தத் தெரியாமையே வெகு தூரத்துக்கு அந்த மனிதனை முழுதிலும் நம்பிவிட வைத்துவிடுகிறது. நெஞ்சின் ரகசியங்களைக்கூட அவனிடம் சொல்லவும் வைக்கிறது. அவனுக்கு உபசாரங்களும் நடத்தச் சொல்லுகிறது. அவனை இன்னும் காணோமே என்று அவன் வருகைக்கு எதிர்பார்க்கவும் வைக்கிறது. இவ்வளவும் இந்த மனிதனின் கோணலான தன்மட்டில் பார்த்துக் கொள்ளுகிற போக்கு தெரிகிறபோதோ முழுதும் மாறிவிடுகிறது. அதுவரை ஏமாறியது போதுமென்று விலகவும் நேருகிறது. பிறகு ஒன்றுசேரினும் பழைய ஒற்றுமை மறுபடி இல்லை யென்பது நிச்சயமே.




# எனது தடுமாறிய காதல்.

---



இன்று பகலில் இரண்டு கடிதங்கள் எனக்குக் கிடைத்தன. அதில் ஒன்று என் தங்கையின் கடிதம். அதில் என் அழகிய ராதா என்மீது கொண்டுள்ள காதலைப்பற்றிக் குறிப்பிட்டிருந்தாள். "உங்கள் அண்ணாவுக்கு வேலை கிடைத்துவிட்டதாமே; எந்த ஊருக்குப் போயிருக்கிறார்? என்ன சம்பளம்? தனியாகவா போயிருக்கிறார்?" என்று என் தங்கையைப் பலபலவுங் கேட்டு மகிழ்ந்து நின்றனளாம். "ஏன் இவ்வளவு ஆத்திரப்படுகிறாய்? நீதான் துணைக்குப் போய்வாவேன்" என்று தங்கை கூற அதுகேட்டு ராதா வெட்கி நின்றனளாம். இதனை வாசிக்கையில் அன்பு பெருகி என்னையே மறந்து நின்றேன். ராதா என் அருங் காதற்கனி. எனக்கென்றே தெரிந்தெடுத்த மாணிக்கம். நாங்கள் இருவரும் விவாக தினத்தை ஆவலாய் எதிர்நோக்கி நிற்கின்றோம்.

* * *

இவ்வண்ணம் ராதாவின் தியானத்துடன் மற்றொரு கடிதத்தைப் பிரித்தேன். அது என் தந்தையின் கடிதம். தத்தம் தொழிலினிமித்தம் வேற்றூர் சென்று வாழ்வோர் தம் பெற்றோர் உற்றாரிடமிருந்து வரும் கடிதங்களை எத்துணை ஆவலுடன் வரவேற்பரென்பதைக் குறித்து நான் அதிகம் சொல்லவேண்டியதில்லை. வெகு பிரியத்துடன் தந்தையின் கடிதத்தைப் படித்தேன். ஆனால் சந்தோஷிக்க முடியவில்லை. பெரிதும் மனக்குழப்பமாகித் தத்தளித்தேன். அதில், எங்களுக்கு நெருங்கிய பந்து ஒருவர் தன்னுடைய பெண்ணை எனக்குக் கொடுத்து, ஆண்சந்ததியற்ற அவருடைய பதினாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள நிலத்தையும் எனக்கு உரிமையாக்குவதாயும் கூறுவதால், அதற்கு என்னுடைய அபிப்பிராயத்தைத் தெரிவிக்கும்படியும் எழுதியிருந்தார்.

* * *

பணம் பாஷாணம் என்பார்கள். அவ்விதமே என் சிந்தையும் பணத்தில் மயங்கித் தடுமாறிற்று. ஏழைப் பெண்ணான ராதா பெரிதா?—பணத்துடன் வரும் பெண் பெரிதா?—என்று நெடுக யோசித்தேன். என் காதல் நினைவு பணத்தினிடமும் சென்றது; என் அருங்கிளி ராதாவின்மீதும் சிறிது ஊசலாடியது. கடைசியில் எந்த முடிவுக்கும் வருவதற்கில்லாமல் கலங்கினேன். என்

---

தான் ஆசை வைத்தவர்கள் போய்விட, தான் வெறுத்தவர்களோ நெடுநாள் வாழ்கிறார்கள். மனதொத்திருந்த முன் மனைவிக்கு அற்பாயுள். எதிர்க்கும் சண்டைக்காரியும், வாய்ப்பட்டியுமான பின் மனைவிக்கோ பூர்ணாயுள்!

நண்பர்களிடம் இதைத் தெரிவித்த போது, "பெண்ணைப் பிறந்த ராதா வுக்கு விவாகம் நடக்காமல் போகுமா? அதைப்பற்றிக் கவலைப்படாமல் உனது தரித்திரம் தீரப் பணத்துடன் வரும் பாக்கியவதியையே மணமுடித்துக் கொள்ளப்பார்" என்று கூறினர். "எவ்வளவுதான் காதல் சாதிக்கினும் எல்லாம் பணத்தின் முன்பு பறந்துவிடும்; பணம் எந்த உறவையும் விட்டுவிடும்"—என்று மற்றொரு நண்பர் மொழிந்தார். என் புத்தியும் பணத்தில் மயங்கிற்று. ஆனால் ராதாவுக்காகவும் தவித்தது. கடைசியில் "யோசித்து எழுதுகிறேன்" என்று தந்தைக்குக் கடிதம் வரைந்துவிட்டேன்.

***

ஒரு மாதம் சென்றது. இத்தனை நாளும் பணமா?—ராதாவா? எது வேண்டும் என்று மனத்தைக் கேட்டவாறிருந்தேன். என் தந்தையிடமிருந்து மற்றொரு கடிதம் கிடைத்தது. அதில் பின்வரும் விஷயங்கள் இருந்தன. "பெண்வீட்டார் கல்யாண விஷயத்தில் அவசரப்படுகிறார்கள். நான் இதில் எவ்வித தீர்மானத்தையும் கொள்ளவில்லை. உன் தாயார் முதலியோர் மட்டும் இதை விட்டுவிட மனமில்லாமலிருக்கிறார்கள். ஆயினும், இன்பமோ துன்பமோ பின்னால் அனுபவிப்பவன் நீயே யாதலால் நன்கு யோசனை செய்து, உனக்கு வேண்டியவர்களிடத்திலும் கலந்து ஆலோசித்து சீக்கிரம் மனஸ்பூர்வமான பதில் தெரிவி" என்று பெருந்தன்மையுடன் எழுதியிருந்தார்.

***

என்ன விடை தருவது? என் நண்பர்களோ "வலிய வரும் சம்பத்தையும் சம்பந்தத்தையும் இழந்து விடாதே" எனக்கூற முன்வந்தனர். கடைசியில் பணமே பெரிதெனக் கொண்ட பித்தனானேன். பணம் தான் கொண்ட காதலையும் மறக்க வைக்கும்; படுகொலையையும் செய்ய வைக்கும்... "தாயார் முதலியோரின் கருத்து அதுவாயின், தங்களுக்கும் விருப்பமிருப்பின், நான் கூறுவதென்னவிருக்கிறது? தங்கள் மனம் போல் செய்யலாம்" என்று ஜாடையாக என் சம்மதத்தை எழுதித் தெரிவித்து விட்டேன். என் மனமாறுதலைக்கேட்ட என் பழங்காதலியின் மனம் என்ன பாடுபட்டதோ! இக்கடிதத்தை எழுதியனுப்பிய பின்னர் நான் அடைந்த வேதனைக்கு எல்லையில்லை.

***

அன்றிரவு வெகு நேரம் வரை எனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. அந்த அழகிய ராதாவின் உருவம், அவளது அற்புதத் தோற்றம் என் மனத்தில் நர்த்தனம் செய்துகொண்டிருந்தது. நான் இல்லாவிடினும் எவனாவது ராதாவை மணப்பது உறுதி. தனது திருமணக் கோலத்தில் ராதா எவ்வளவு சுந்தரமாய்த் தோன்றுவாள் என்று மனோபாவனை செய்தவண்ணம் துயிலிலாழ்ந்தேன். ஆகா! என்ன அற்புதக்காட்சி!! நினைவே கனவாய், என் வாழ்நாளுள்ள வரை மறக்க வியலாத் தரிசனமாய் ராதா என் முன்பு தோன்றினாள். அந்த அற்புத மடந்தை அழகிய திருமணப் பணிகளைப் பூண்டு,

---

இளமையிலேயே விவாகம் செய்வதால்பெண்கல்வி பாபராகிக் கலவியில் வந்து முடிகிறது! இதை சாரதா மசோதா தடுத்தால் ஹிந்து மதத்திற்கு ஆபத்து என்கிறார்கள்! உடன்கட்டை யேறுவதைத் தடுத்த நாளிலும் அது மத ஆபத்து என்றார்கள். இப்போது உடன்கட்டை யேறுபவருண்டோ?

சித்திரப்பட்டாடை யணிந்து, என் உயிரை அப்படியே உண்டுவிடத் தக்கதான இயற்கை நலங்களோடும் புன்முறுவலோடும் விளங்கினுள். ஆவலோடும் அவளருகிற் சென்று களங்கமற்ற அவளது மதிவதனத்தில் என் புல்லிய வாயால் முத்தமிட்டேன். சிறிதுநேரம் என் வசமாகி என்னவளாக நின்ருள். பிறகு உடனே திடீரென விலகிச் சிறிது வெறுப்பான பார்வையுடன் நோக்கினுள்.

***

அந்தோ! அந்நோக்கானது என் மனத்தை யப்படியே வாட்டிவிட்டது. "நீ என்னைப் புறக்கணித்தாய், நானும் உன்னைக் கைவிட்டேன்" என்று கூறுவதுபோலிருந்தது. "ஆ! மோசம் போனேன்" என்ற பிரலாபச் சப்தம் என் வாயினின்றுங் கிளம்பிற்று. அவ்வளவில் திடீரென விழித்துக்கொண்டேன். ராதாவின் தொனி இன்னும் என் செவியில் ஒலித்துக்கொண்டே யிருந்தது. கனவின் காட்சியை நினைத்து நினைத்து மனம் வெதும்பினேன். அக்குணமணி கடந்த சில வருஷங்களாகக் காட்டிய அன்பையெல்லாம் எண்ணி எண்ணி ஏங்கி மனங்கசிந்தேன்.

***

என் பிதாவினிடமிருந்து பதில் வர இரண்டு தினங்கள் சென்றன. அவ்விரு நாட்களும் இரு யுகங்களாகவே தோன்றின. என் பிற்கால வாழ்நாளின் இன்பமோ துன்பமோ நான் எதிர்பார்த்த கடிதத்தைப் பொறுத்துத்தான் என்று நினைத்தேன். கடிதமும் வந்தது. ஆவலுடன் படித்தேன். அப்படியே ஸ்தம்பித்து உட்கார்ந்துவிட்டேன். "நீ புத்திசாலி யென்றிருந்தேன் உன்னையே நம்பி நின்ற ராதாவை நீ மறந்துவிட்டாய். அவளுக்கும் அடுத்த வாரத்தில் விவாகம் நிச்சயமாய்விட்டது. நேற்று உனக்கும் நிச்சயார்த்த சடங்கு நடந்தேறிவிட்டது. மூன்று தினத்திற்குள் வந்து சேரவும். பெண்வீட்டார் மிகவும் அவசரப்படுகிருர்கள்" என்று என் தந்தை வரைந்திருந்தார்.

***

என் மேல் அதிகாரி விவாகத்திற்கு முந்திய நாளில்தான் என்னைப் போகவிடுத்தார். விவாகமாகிப் பணம் கிடைத்ததும் இந்தப் பாழும் உத்தியோகத்தை விட்டுவிடுவதென்றும் தீர்மானித்துக்கொண்டேன். ராதாவின் விவாகம் என் ஊரிலும், எனது விவாகம் பெண்ணின் இருப்பிடமான மற்ருேர் ஊரிலும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. தந்தை ரயிலுக்கு வந்திருந்து என்னை அழைத்துச் சென்ருர். தங்கை சுகமாவென்று கேட்டேன். அவள் ராதாவின் கலியாணத்தைவிட்டு வரமுடியாதென்று சொல்லி விட்டாள் என்று தந்தை கூறினர். ராதாவின்மீது என் தங்கைக்கு இருந்த அன்புகூட எனக்கு இல்லாதொழிந்ததற்கு வெட்கினேன். ஆ! பணத்தின்ஆசை இது! பணம் எந்த பாதகத்தைத்தான் செய்யாது?

***

மறுநாள் அதிகாலையில் நான்கு மணிக்கு என் விவாகமும் நடந்தேறியது. எவளோ ஒருத்தி என் மனைவியாகப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தாள். சாரதா என்று அவளுக்குப்

---

சிறையிலிருந்து விடுதலை பெறுகிற தேசபக்தர்களுக்கு அந்த முதல் நாளில் ஊர்வலமும் பாராட்டுதலும் மிகமிக நடக்கிறது. அவர்கள் மற்றவர்களை நம்பிக்கெட்டுச் சிறையில் பட்ட பாட்டிற்கு அவ்வளவாவது வேண்டாமா?

பெயராம். அவள் கருப்போ சிவப்போ! அவள் முகத்தையே நான் பார்க்கவில்லை. கருப்பாய் இருக்கிலென்? பணம் கருப்பைப் பார்க்குமா? நாசமாய்ப்போன பணத்தினுசை நடுவேவந்து என்னை நம்பிய ராதாவை நான் கைவிட நேர்ந்தது. அது என் தலைவிதி! கடைசியில் நானும் மணப்பெண்ணுமாக எழுந்து பெண்களால் சூழப்பட்டு ஓர் அறைக்கு அருகில் சென்றோம். அங்கு நான் திடுக்கிடும்படியாக என் தங்கை நின்றுகொண்டிருந்தாள். அவள் அவ்வறையின் கதவை மூடிக் கொண்டு, "அண்ணு! உன் பெயரையும் உன் மனைவியின் பெயரையும் சொன்னுல்தான் உள்ளே விடுவேன்" என்றுள். நான் சொல்ல மறுத்து விட்டேன். பிறகு மணப்பெண்ணை "உன் பெயரையும் உன் பர்த்தாவின் பெயரையும் சொல்லு" என்று என் தங்கை கேட்க, மணப்பெண் நாணிய குரலுடன், "என் பர்த்தாவின் பெயர் பணத்தாசை கொண்ட பித்தர், என் பெயர் ராதா" என்றுள். ராதா என்றதைக் கேட்கவும் வியப்புடன் மணப்பெண்ணின் முகத்தை உற்று நோக்கினேன். ஆ! என்ன அதிசயம்! அவள் உண்மையிலேயே ராதாவாகவே இருக்கக்கண்டு பிரமித்துவிட்டேன். மீண்டும் மீண்டும் அவளது முகத்தை நோக்கினேன். அவள் உண்மையாகவே என் மனங் கவர்ந்த ராதா தான். எனது ஆநந்தத்தை அளவிடவுங் கூடுமோ?

***

அத்தருணத்தில் என் தந்தை புன்னகையுடன் அங்குவந்து என்னை நோக்கிப் பின்வருமாறு கூறினர்.

"நீ நினைத்தபடி ராதா ஏழைப் பெண்ணல்ல. அவள் தாயும் ஏழையல்ல. ராதாவுக்கு அவளது தகப்பனுர் இட்ட பெயர் சாரதா என்பதாகும். ஆயினும் செல்வப் பெயராக ராதா என்றே அவளை யாவரும் சொல்லி வந்தனர். ராதாவின் தந்தை இறக்கும்பொழுது தமது ஒரே பெண்ணுக்குத் தமது சகல சொத்துக்களையும் ஒப்புவித்து விவாகமானதற்குப் பிறகு தருமாறு பாங்கியில் ஏற்பாடு செய்திருந்தார். இது ராதாவின் தாய்க்கும் உனது அன்னைக்கும் எனக்கும் மட்டுமே தெரிந்த ரகசியமாகும். ராதா ஏழைப்பெண்ணுகவே வளர்க்கப்பட்டாள். குணசாலியாய் உன் மனத்தையும் கவர்ந்தாள். உன் புத்திப்போக்கைப் பரீக்ஷிப்பதற்காக, வேறிடத்தில் பணத்துடன் வருகிற பெண் இருப்பதாக உனக்கு எழுதினேன். பித்தனுன நீ பணத்தில் மயங்கி அன்பின் களஞ்சியமான ராதாவைக் கைவிட்டுவிட்டாய். நீ இழந்துவிட்ட மாணிக்கம் மறுபடியும் உன் கைக்குக் கிடைத்திருக்கிறது. இனிமேலாவது பணத்தைப்பொருட் செய்யாமல் குணத்தையே பெரிதெனக்கொண்டு குணமணியான ராதாவைக் களிப்புறச் செய்" என்று கூறினர். நாணத்துடனும் பெருமகிழ்வுடனும் தலை குனிந்து நின்றேன். அடுத்த நிமிஷத்தில் நானும் ராதாவும் பேசிக்கொண்டதைச் சொல்லவும் வேண்டுமோ? முக்கியமாய் இதில் என் தங்கைக்குத்தான் அதிக சந்தோஷம். என் கதையிலிருந்தும் நீங்கள் மனிதன் எத்தனை விரைவில் பணத்தைக் கருதி மாறிப் போகிறு னென்பதை யுணரலாம்.

M. துப்புராமி பிள்ளை.

---

"தற்காலம் "வைதீகர்கள்" என்று சொல்லிக் கொள்ளுகிறவர்களினின்றும் கடவுள் நம்மைக் காப்பாற்றுமாறு, நாம் கடவுளைப் பிரார்த்திப்போம். என்கிறுர்"—ஸ்ரீமான் ஆர். கிருஷ்ணய்யங்கார் பி. ஏ. பி. எல்.





இன்று கூடிய நமது கடையில் தாண்டவக்கோன் ஆத்திரத்துடன் புத்திசாலிகளைப் பற்றி ஒரு பெரிய பிரஸங்கம் செய்தார்:—

“நான் மூடர்களுக்கு மத்தியிலிருந்ததால், நான் மறந்து வெளியில் வைத்துவிட்ட அரிய கைப்பிரதி நூல் ஒன்று மூன்று தினங்களாக எடுப்பாரின்றி அப்படியே கிடந்தது. பின் நான் அதைக்காண நேர, என் பெரிய தவறுதலுக்குத் திடுக்கிட்டேன். நான் புத்திசாலிகட்கு மத்தியில் இருந்திருப்பேனாயின் அந்நூலை இழப்பது மட்டுமன்றி ஆயுட்காலமுழுதும் அதற்காக இரத்தக் கண்ணீர் விட்டுத் துக்கிக்கவும் நேர்ந்திருக்கும். புத்திசாலிகளின் வேலை யென்ன? தங்கட்கு மிகவும் உபயோகமும் அரிதுமான பொருள் ஒன்றை அதைப் பார்த்ததும் தெரிந்து கொள்வதே. அதற்குப் பிறகு நடக்கும் சங்கதி யென்ன? தான் கண்டதை எவரும் பார்க்காதிருந்தால், மெதுவாக எடுத்து மறைத்து வைத்துக்கொண்டு போய்த் தங்களின் சொந்த சொத்து ஆக்கிக் கொள்வதே. இது பாவமல்ல வென்று புத்திசாலிகளின் அபிப்பிராயம். இத்தகைய புத்திசாலிகள் என்னைச் சூழ்ந்திராதது எனது பெரியதோர் பாக்கியமென்பேன். அன்றையதினம் ஒரு புத்திசாலியாவது என்னைத் தேடி வந்திருந்தால் என்னுடைய நூல் அவனுடைய நூலாக ஆகியிருக்கும் என்பது நிச்சயமே. இவ்வளவு கேவலமாக மீறி ஒரே முடிவு பேசுவது மடமை என்று என்னைச் சிலர் ஏசலாம்.

***

சொல்ப சொத்துக்காகவும், அந்தப் பெண் தனக்கே கிடைக்கவேண்டுமென்பதற்காகவும் எவ்வளவோ கலகங்கள் நேர்கின்றன. எத்தனையோ பந்தத்துவங்களெல்லாம் காற்றில் பறக்கின்றன. இந்த நிலையில் என் அரிய நூல் மற்றொருவர் கையில் சிக்கியிருப்பின் பெரிய பணக்காரனாகலாம். அதை அச்சிட்டுப் பிழைக்கலாம். இப்படி லாபம் இருப்பதைத் தெரிந்த புத்திசாலி அந்த சமயத்துக்கு ‘அது பிறர் சொத்து’ என்று தர்ம சாஸ்திரத்தை நினைத்துப் பார்ப்பானென்று நான் நம்பவில்லை. தனக்கு அடுத்துள்ள அதிகாரிக்குத் திடீரெனப் பிராணபத்து என்றதைக் கேட்டதும், தனக்கு அந்தப் பதவி அவன் இறந்தால் கிடைத்துவிடும் என்று எண்ணாத புத்திசாலியான உத்தியோகஸ்தர்கள் அபூர்வம்! பொதுவாக, புத்திசாலிகளையே நான் வெறுக்கிறேன். ஏனெனில், வெறுமனே என்னைக் காண வருவதில்லை. என் காரி

---

எனக்கு மிகவும் தெரிந்தவர், நம்பிச் சரக்குகள் கடனுக்குத் தரலாமென்று சிபாரிசு செய்பவர், தாமே ரொக்க பணம் கொடுத்துச் சரக்குகளைப் பெற்று அனுப்பிவிட்டு, பிறகு அவரிடமிருந்து வசூலித்துக்கொள்கிறது தானே! அதற்குமட்டும் தமது கை கடிக்காமல் தந்திரமாகத் தப்பித்துக்கொள்கிறார்!

யங்களையெல்லாம் உள் நுழைந்து கவனிக்கிறார்கள். நான் பெட்டியைத்திறந்தால் அதில் என்னென்ன இருக்கிறதென்று அவர்களின் கண்கள் கூர்மையாக ஆராய்வதால், அவர்களின் முன்பு என் பெட்டியைத் திறக்க நடுங்குகிறேன். நான் எப்படி எந்தெந்த வேலைகளை எவ்வெவ்வாறு செய்கிறேனென்பதையும் அவர்கள் கண்டுபிடித்துவிட முயலுகிறார்கள். அதுவும் வெகு தந்திரத்துடனே நட்பைக் காட்டிதான்! இந்த நரித் தந்திரம் எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை.

***

இவ்விதமான தந்திரிகளைக் காண்கையில் நான் உடனே ஜாக்கிரதையாகி ஏமாறாமலிருக்கப் பிரயத்தனப்படவேண்டியிருக்கிறது. முன்னொரு தரம் ஒரு புத்திசாலியை என் கடையில் வைத்திருந்தேன். அவன் தன் வேலையைச் செய்வதுடன் நிற்காமல் மற்ற வேலைகளிலும் பழகிக்கொண்டு, நான் செய்கிற தலைமைஸ்தானத்தின் காரியங்களிலும் தேர்ச்சிபெற்று விட்டான். என்னுடைய கடைக்கு எதிர் கடை வைக்கக்கூடிய அவ்வளவுக்குக் கற்றுவிட்டானென்று தெரிந்ததும், இனி இவனை இங்கு வைப்பது என் தலைக்கே பெரிய கொள்ளியென்று மறுதினமே அவனை நீக்கிவிட்டேன். என்னைப்போலவே நாளைக்கும் சில முக்கியஸ்தர்கள் அதிக புத்திசாலிகளைக்கண்டு நடுங்குகிறார்கள். நேற்று ஒரு புத்திசாலி என்னைக் காணவந்து என் வேலைகளுக்கு உதவியாகக் கூட இருப்பதாகவும் சொன்னான். அது சந்தோஷம் தான், சரிதான். ஆனால், எப்படி எனக்கு அவன் உதவி செய்வது என்பதுதான் பெரிய கவலையுள்ள கேள்வி. எனக்கு உதவி செய்ய வருவதில் என் வியாபார ரகசியங்களையெல்லாம் அவனுக்கு முன்பு நான் திறந்து வைத்தல்லவா ஆகவேண்டும். நாணத்தைக் கைவிடாமல் சுகிக்க முடியாததுபோல், என் வர்த்தக ரகசியங்களை யெல்லாம் அவன் அறியாதபடி வைத்து நான் அவனது உதவியைப் பெறுவதென்பதும் முடியாது.

***

ஆதலின், அவனுடைய உதவியை விரும்பாமல் அனுப்பிவிட்டேன். இந்தப் புத்திசாலியைவிட ஒரு மூடனை என் உதவிக்கு வைத்துக்கொள்வது சிலாக்யமாக இருக்கும். ஏனெனில் அந்தமூடன் நான் இட்ட வேலைகளைமட்டுமே செய்வான். அதற்கு மேல் யோசிக்கிற சக்தியோ, கற்றுக் கொள்ளுகிற சக்தியோ அவனுக்கு இல்லை. புத்திசாலிகளுக்குள்ள கபடநினைவும் அவனுக்குக் கிடையாது. வேலைகளையும் விஸ்வாசத்தோடு செய்து என்னை விட்டுப் பிரியாமலுமிருப்பான். புத்திசாலியோ சீக்கிரம் பிரிந்து போகக்கூடியவன். ஓரிடத்தில் ஒரு குமாஸ்தா வேண்டியிருந்தது. அதிக புத்திசாலியான ஒருவர் தமக்கு அந்த வேலையைத் தருமாறு கேட்டார். கடையின் சொந்தக்காரர் உமது பெரிய மூளைக்கு நான் தரும் சம்பளம் சொற்பமேயாதலால், சீக்கிரம் இவ்விடத்தை விட்டுப் போய் விடுவீர். மறுபடியும் நான் வேறு குமாஸ்தா தேடவேண்டிவரும். ஆனதால் சொற்ப படிப்புள்ள மத்திய நிலையிலுள்ள ஒருவரையே குமாஸ்தாவாக வைத்துக்கொள்ள விரும்புகிறேன். ஏனெனில், அந்த குமாஸ்தாவுக்கு நான் தரும் சம்பளம் போதுமானதால்

---

மனங் கொதித்துப் பிறரைத் தாக்குவதிலும், வெயிலுக்குப் பயந்து தீக் குதிப்பிலும், பிறகு ஏன் அவ்விதம் செய்தோமென்ற தவிப்பேயன்றி வேறு எப்பயனுமில்லை. தன் ஆத்திர மனதைச் சற்று அடக்கினால் எவ்வளவோ சுகம்.

என்னை விட்டு விலகாமல் என்னுடனேயே இருப்பார் என்றார். இதைக் கேட்டதும் புத்திசாலி தலைகுனிந்து வெட்கிச் சென்றுவிட்டார்.

***

இன்னொரிடத்தில் ஒரு மானேஜர் இருந்தார். அவர் தன்னிடமுள்ள ஒரு குமாஸ்தா அதிக புத்திசாலியாயிருப்பதைக் கண்டு எங்கே தன் பதவியை அவன் வகித்துத் தன்னை விலகிவிடச் செய்துவிடுவானோவென்று நடுங்கினார். உடனே அவன் பெறுகிற சம்பளத்திலும் அதிகமாக ஒரு பத்து ரூபாய் கூடி வரக்கூடிய இடத்தில் அவனுக்கு சிபாரிசு செய்து வேறிடத்தில் உயர்ந்த சம்பளத்திற்குப் போகும்படி மயக்கி அனுப்பிவிட்டுத் தன் தலைக்கு வந்த ஆபத்து தீர்ந்ததென்று சந்தோஷப்பட்டுக் கொண்டார். கடைசிக் குறிப்பாக இன்னும் இரண்டைச் சொல்லி முடிக்கிறேன். ஒரு நண்பரிடத்தில் ஒரு புத்திசாலி வந்து ஒரு வாரம் வரையில் தங்கினார். நண்பரின் புஸ்தகங்களை யெல்லாம் பார்க்க விரும்பினார். நண்பரோ அவற்றையெல்லாம் காண்பித்தால் சில புஸ்தகங்களைத் தான் படித்துவிட்டுத் தருவதாகப் புத்திசாலி சொல்லக்கூடும். அதற்கு தான் மறுக்காமல் ஒப்பவேண்டியும் வரும். **புத்திசாலியின் கையில் சிக்கிய உயர்ந்த நூல்கள் மறுபடியும் திரும்பி வருவது அபூர்வம்.** எவ்விதமோ தவறிவிட்டதென்று சொல்லிச் சமாளித்துவிட அந்தப் புத்திசாலிக்கு எவ்வளவோ தந்திரங்கள் தெரியும். பிறகு நூல் போனது போனதுதான். ஆகவே, ஏமாறுமல் எச்சரிக்கையாகவே யிருக்கவேண்டுமென்று, அவன் அதைப்பற்றிக் கேட்கும்போதெல்லாம் வேறு பேச்சைத் தொட்டுக்கொண்டு அதை மறக்கச் செய்து இவ்விதமே ஒரு வாரத்தையும் போக்கி அவனைத் தந்திரமாக அனுப்பி வைத்துவிட்டார். அவருடைய புத்தகங்களும் இன்னொருவர் கைக்குப் போகாமல் தப்பிப் பிழைத்தன.

***

வேறொரு நண்பர் ஒரு புத்திசாலியிடம் தனக்கு செலவுக்கு மிகக் கஷ்டமாயிருக்கிறது என்று சொல்லிக் கொண்டார். அதைக் கேட்ட புத்திசாலி, நீங்கள் நேற்று சேவிங்க் பாங்கியில் ஐம்பது ரூபாய் கட்டினீர்களே, பணமில்லை என்கிறீர்களே என்றார். இதைக் கேட்டதும் நண்பர் நடுங்கி, இதுபோல் எத்தனை ரகசிய சங்கதிகளை நம்மிடமிருந்து இந்தப் புத்திசாலி தெரிந்துகொண்டிருக்கிறாரோ வென்று கவலைப்பட்டார்.

***

மொத்தத்துக்குப் புத்திசாலிகள் என்போர் நமது தலையில் சட்டியைக் கவிழ்க்க வருகிறவர்களாகவே தான் எண்ணி அஞ்சி விலகவேண்டியிருக்கிறது. சாதாரணமானவர்கள் வந்தால் மவுனமாயிருந்து வேறு சங்கதிகளைப் பேசிவிட்டுப் போகிறார்கள். புத்திசாலிகள் வந்தாலோ அந்த சமயம் என்ன வேலையை எவ்விதம் செய்கிறோமென்று ஆராய்கிறவர்களாகவும், நமது பக்கத்தில் அலங்கோலமாய்க் கிடக்கிறவற்றை யெல்லாம் எடுத்துப் பார்த்து நன்கு கவனிப்பவர்களாகவும், நமது கையிலிருப்பது என்ன புஸ்தகமென்று அறிய விரும்புகிறவர்களாக

---

பள்ளியறையே பாவையர்தம் அரசாங்கம். அதில்தான் பல பல தலையணைப் பிரசங்கம். தோகைமின்னார் தொடுக்கும்போரின் வீரம் வியத்தற்குரியதாய் நிகழும் இடமும் அதுவே. மறைத்துள்ள விருப்பத்தினை வெளியிடும் மகிமை ஸ்தலமும் அதுவே, நாணம் நீங்கி நலமுறுதலும் அங்கேயே,

வும் இருக்கிறார்கள். ஆதலின், புத்தி சாலிகள் நம்மருகே வந்ததும் நமது வேலைகளையும், நமக்கு வந்த தபால் கடிதங்களையும் உடனே மறைக்க வேண்டியதாயும், அவர்கள் போன பிறகு தான் பார்க்கவேண்டியதாயு மிருக்கிறது" என்று ஒரு பெரிய பிரசங்கமாகச் சொல்லி முடித்தார்.

***

உடனே அல்லாபிச்சை எழுந்தார். "புத்திசாலிகளைப் பற்றிச்சொல்லியதெல்லாம் சரி. ஆனால், அவர்களிலும் சில உத்தமர்கள் இருக்கிறார்கள். அவர்கள் நம்மையே நேசிக்க வந்து, நாம் அத்தனை அருமையான பொருள்கள் வைத்திருப் பதைப் பார்த்து ஆநந்தப்படுகிறவர்களாகிறார்கள். நாம் மறந்து வைத்து விட்டாலும் எடுத்துக் கொடுத்து உள்ளே வைக்கும்படி நமக்கு ஞாபக மூட்டுகிறார்கள். நாம் வியாதியிற் கிடந்தால் வந்துமட்டும் பார்த்து விட்டு, நாம் பேச எழுந்தாலும் பேசக் கூடாதென்று தடுத்துவிட்டு, நமது நோயின் உபாதைகளை நமது வீட்டிலிருப்பவர்களிடம் விசாரித்துத் தெரிந்து கொண்டு போகிறார்கள். நமது வேலைகளையும் செய்து கொடுத்து உதவுகிறார்கள். நெஞ்சில் இருப்பதை வெளியில் அப்படி யப்படியே கொட்டுகிறார்கள். இப்படிப் பட்டவர்களுடன் நாம் சகவாசம் செய்தால் எதுவுமே கெட்டுவிடாது. எதுவும்பழகியே தான் சொல்லவேண்டும். நமது வீட்டில் நம்முடன் இருப்பவர்கள் புத்தி சாலிகளாய் இருந்தால் நமது காரியங்களுக்கு எவ்வளவோ உதவி. நமது ரகசியங்களும் வெளியில் போகாது. பாதிவேலையை அவர்களின் தலையில் சுமத்திவிடலாம். அவர்களும் சிரத்தையோடு தங்கள் வேலைபோல் சொந்தம் பாராட்டிச் செய்வார்கள். இன்னும் நாம் நன்றாய்ச் செழித்து வாழ வேண்டு மென்கிற புத்திசாலிகள் சிலருண்டு. அவர்களால் நாம் அடைகிற பிரயோஜனங்களை எண்ணிக் கணக்கிட முடியாது. நமக்கு அப்படிசெய் இப்படிசெய் என்று திருத்திக்கொடுத்துப் புதுவழி காட்டும் புத்திசாலிகளும் இருக்கிறார்கள். அவர்களை எப்பொழுதும் நாம் வணங்க வேண்டியவர்களே. நமக்கு ஒரு பிழைப்பைக் காட்டுவிக்கிற புத்திசாலிகளும் இருக்கிறார்கள். தாங்கள் அன்னியர்களாக இருந்தாலும், நம்மைத் தங்களின் சொந்த சகோதரமாக நினைக்கிற புத்திசாலிகளும் இருக்கிறார்கள். நாம் ஏழையென்று எண்ணி ஐயோ பாவம் பிழைத்துப் போகட்டு மென்று தர்ம நினைவுடன் தயாளுவாய் நடக்கிற புத்திசாலிகளும் இருக்கிறார்கள். நாம் என்ன சிடுசிடுத்துத் திட்டினாலும் அதற்காகக் கோபங் கொள்ளாமலும், கொண்டாலும் அதை உடனே மறந்தும் மறுபடி நம்மைவிட்டுப் பிரியாமல் குலாவுகிற புத்திசாலிகளும் இருக்கிறார்கள். நமது அவசரத்துக்கு மட்டும் ஓடிவந்து உதவி செய்து விட்டு அப்பால் எட்டிப் பாராமலே தூர இருந்து நமது க்ஷேமத்தை மட்டும் கோரி நிற்கிற உத்தம ஹிருதயம் படைத்த புத்திசாலிகளும் இல்லாமலில்லை. ஆதலின், ஒரேயடியாய் "புத்திசாலிகள்" —என்போர் மஹா பொல்லாதவர்களென்று முடிவுகட்டி விடக் கூடாது. அதிக புத்திசாலித்தனம் "நாசத்திற்கு"ம் போகிறதுண்டு; சத்திய நெறியில் திரும்பி சன்மார்க்கமாவதும் உண்டு" என்று சொல்லி முடித்தார். இத்துடன் நமது கடையும் முடிவு பெற்றது.

'பஹதூர்' பொன்வண்டு சேட்டியார்.

---

நன்றே செய்யின் இன்றே செய்மின்.

# பொறுமையின் உயர்வு.



இரயில் வண்டியில் உட்கார்ந்திருப்பது அரைமணி நேரமே. ஆயினும், அதுவரை என் சௌகர்யமான இடத்தில் உட்காரப் படாது என்று நினைக்கிறோம். ஸ்வல்ப நேரந்தரனே, வீணாக வண்டியி லிருப்போருடன் சண்டை போடுவானேன் என்று நாம் யோசிப்பதில்லை. இவ்விதமே ஜனங்கள் கூடியிருக்கு மிடத்திலும் நமது ஆத்திரத்தைக் காண்பிக்கிறோம். இந்த ஸந்தர்ப்பங்களில் பொறுமையென்னும் உத்தமமான குணம் உதவி செய்தால் எத்தனையோ விதமான சண்டைகள் அடங்கிப்போம். அற்ப ஆயுளையுடைய மனுஷ்யன் தன் ஜீவகாலத்தில் அகங்கார மென்னும் பிசாசால் பீடிக்கப்பட்டுப் பொறுமையைக் கைவிட்டு விடுகிறான். இதனால் இவனுக்குக் கிடைக்கும் பிரக்யாதி என்ன? துர்நாமமே.

***

தன்னைக் கண்டு எல்லோரும் பயப்படுகிறார்க ளென்று ஒரு மனிதன் சொல்லிக் கொள்வது பெருமையாய்த் தோன்றவில்லை. ஏனெனில், மனிதர்க ளெல்லாம் பாபத்தைக் கண்டு பயப்படுகின்றனர். பாம்பைக் கண்டு அச்சமடைகின்றனர். மற்றும் புலி, கரடி, கோனாய் முதலிய துஷ்ட மிருகங்களெல்லாம் மனிதர்க்குப் பீதியை விளைக்கின்றன. கொடிய அசுரனாகிய இராவணனைக் கண்டு சீதை அஞ்சினாள். இடி, பூகம்பம், அக்கினிமலை இவற்றைக் கண்டு உலகமே நடுங்குகிறது. அதனால் மேலே கூறிய பாபம், பாம்பு, புலி, கரடி, கோனாய், இராவணன், இடி, பூகம்பம் முதலியவைகட்குப் பெருமை உண்டாய் விட்டதோ? விஷத்தைக் கண்டு வெறுப்பதுபோல் உலகமானது துஷ்டனைக் கண்டு விலகியோடும். கோபத்தால் பாபமும், பொறுமையால் புண்யமும் லபிக்கின்றன.

***

ஒரு குளக்கரையில் ஆலமரத்தடியில் மகாயோகி யொருவர் உட்கார்ந்திருந்தார். இவர் வீணாகக் காலம் கழிப்பவரென்று நினைத்த சில அவிவேகிகள் அவரிடம் சென்று வாயில் வந்தபடி தூஷித்தனர். யோகி ஒன்றும் பேசாமலிருந்தார். மறுபடியும் நிந்தித்தார்கள். மகான் ஸந்தோஷமடைந்தார். அவருடைய பொறுமையைக் கண்டு வேறொரு புத்திசாலி, "ஐயா, இவர்கள் ஏசுகிறார்களே, நீங்கள் ஏன் பதில் பேசாமலிருக்கிறீர்கள்" என்றான். பெரியவர் அப்பா, நான் பிறந்த நாள் முதல் யாருக்கும் எவ்வித உபகாரமும் செய்ததில்லை. பிக்ஷுகனாகிய என்னிடம் யாசிப்பவர் யாருமில்லை. ஒருவரையேனும் திருப்திபடுத்தாத இந்த ஜன்மம் இருந்தென்ன? நாம் யாரையும் ஸந்தோஷப்படுத்த முடியவில்லையே யென்று ஏங்கிக் கொண்டிருந்

---

தேன். இன்று இந்தப் புண்ய புருஷர்கள் என்னை ஒரு பொருளாக மதித்து என்னருகே வந்தனர். என்னைத் திட்டுவதால் அத்தனை ஜீவாத்மாக்களும் திருப்தி யடைகின்றன வென்று நான் குதூகலம் கொண்டேன். இன்றுதான் நான் உதவி செய்தவனானேன். என்னுடைய பொறுமையால் இத்தனை பேர்களுடைய மனமும் ஸந்தோஷமுற்று நானும் திருப்தி யடைந்ததால் அவ்வுத்தம குணத்தை நான் ஒருநாளும் கைவிடமாட்டேன் என்றார். அவிவேகிகளனைவரும் வியப்புடன் வெட்கிப்போயினர்.

***

தான் எதுவும் நன்மனத்துடனேயே செய்து வந்தும், அதைப் பிறர் மதியாது கேவலப்படுத்துமிடத்திலும் பொறுமையைக் கைக்கொண்டு எப்பொழுதும் போல் ஹிதத்தையே செய்து வரப் பழகினால் அதன் சுகம் பிறகு தெரியவரும். தன்னை அவமதித்தவர்களுக்குத் தெளிவு பிறக்கும் காலமும் ஒன்று இருக்கும். அப்பொழுது அவர்களின் மனமே உபகாரியை நோகவைத்தோமே, உண்மையில் உழைத்தவனை அவமானம் செய்தோமே என்று வருந்தும். அவர்கள் வருந்தினும் வருந்தாவிடினும் நமக்கு அதைப்பற்றிக் கவலையில்லை. நாம் செய்யவேண்டிய நன்மையைச் செய்துகொண்டே போகக்கடவோம். அதைக் கடவுளுக்குப் பிரீதியாகச் செய்யக்கடவோம். அதன் பலனைப்பற்றிச் சிந்திக்க வேண்டாம். நாம் பொறுமையைக் கற்றுக்கொள்ள இவ்விதமாகத் தருணங்கள் வாய்ப்பதே பெரிய லாபம்.

***

பந்துக்களும், மித்திரர்களும், நம்மால் உதவி பெற்றவர்களும் நம்மைத் துவேஷிக்குந்தோறும் நமது பொறுமையை வளர்த்துச் செல்வோமானால் நமது ஹிருதயம் ஆநந்தமான நிலையிலிருக்கும். எவ்வித பாபஸம்பந்தமான களங்கமும் நமக்கு ஏற்படாது. நமது உத்தம குணங்களும் கெடாது. ஒரு காரியத்தில் சித்திகொள்ள நாடினால் அங்கும் பொறுமைக் குணம் நன்மை செய்யும். பொறுமை என்பதைப் பழகிக்கற்க சந்தர்ப்பங்கள் வாய்க்கும் பொழுதெல்லாம் பயன்படுத்திக் கொள்பவனே பாக்கியசாலி யாவான்.

---

ஆபாஸமான புஸ்தகங்களென்று ஒரு காலம் கருதப்பட்டவை இப்போது வெகு நன்றாய் எழுதிய புஸ்தகங்களென்று ஒப்புக்கொள்ளப் படுகின்றன. ஒரு புஸ்தகம் பதிப்பிக்கப்படும் காலத்தில் அதற்கு உரித்தான மதிப்பைக் கட்டாயம் அடைகிறதென்பதில்லை. நாட்பட்ட பிறகும் புஸ்தகங்கள் செலவான பிறகுமே அருமையாய்ப் பேசப்படுகிறது. முந்திய தலைமுறையார் ஒருநூலை ஆபாஸமென, பின் தலைமுறையில் நல்லதென்கின்றனர்.

---

இன்ன வகுப்பினரென்றும், இன்ன மதஸ்தரென்றும் அவரவர்களின் முகபாவனையே காட்டிவிடுகிறது. அழகிய முகவிலாஸம் கொண்டவர்களைப் பற்றிமட்டும் குறிப்பாய்ச் சொல்ல முடியாமல் சற்றுத் தடுமாறவும் நேர்கிறது.

# சந்திரனைப் பற்றி

(முன்பக்கம் 470-லிருந்து)



ந்த அண்டத்திற்கு மத்திய கோளமான சூரியன் தான் உண்டான காலத்தில் தன்னுடைய சில அம்ஸங்களைத் தன்னைச் சுற்றி ஓடிவரும்படியாய் பூமி முதலிய முக்கிய கிரகங்களாக விட்டதுபோல, இப்பூமியும் தான் உண்டானபோது தன்னுடைய அக்கினி பாகத்தில் சில அம்ஸங்களைச் சந்திரனாக எறிந்து விட்டதென்று சிருஷ்டி விசாரம் செய்பவர் சொல்லுகிறார்கள். இவையெல்லாம் ஒரு உத்தேசமே யொழிய வாஸ்தவமான தத்துவ மென்று உறுதியாய்ச் சொல்லக்கூடாது. அது எப்படியாவது ஆகட்டும்.

***

சந்திரன் இப்பூமிக்கு முக்கியமான உபக்கிரகமாய் மகோபகாரியாயிருக்கின்றது. யாவர்க்கும் தெளிவாய்த் தோன்றத்தக்க அதன் முதன்மையான உபகாரம் இரவில் நிலா வெளிச்சம் தருவதாம். இது சிறந்ததாயினும், எளிதில் அறிந்து கொள்ளக் கூடாத உபகாரம் மற்றொன்று உண்டு. அதாவது கடலில், அலைகளை உண்டாக்கிக் கடல்நீரை ஓயாது மேலும் கீழுமாகப் புரட்டிக் கொண்டே யிருப்பதாம். சந்திரனுடைய சமீபதூரமும் பரிமாணமும் உருவமைப்பும் இக்காரியத்திற்கு மிகவும் ஏற்றதாகவே அமைக்கப்பட்டிருக்கின்றன. சந்திரன் ஒன்றில்லாமற் போனால் சமுத்திரத்தில் அலையே எழும்பமாட்டாது. சூரியனுடைய இழுப்புக் கவர்ச்சியால் சிறிதளவு எழும்பலாம். அது எவ்வளவும் போதாமல் சமுத்திரநீர் அப்படியே நிலையாய்த் தேங்கி, உயிர்வாழ்க்கைக்கு அத்தனையும் அபாயமாய் முடியும். இப்படியாகச் சந்திரன் தன் இழுப்புக் கவர்ச்சியால் உப்பு சமுத்திரங்களைச் சுத்தமாய் வைத்துக் கொண்டிருப்பது மாத்திரமே யன்றி, பூமத்தியிலுள்ள அந்தாரியோ முதலிய அநேகம் சுத்தஜல ஸமுத்திரங்களையும் பரிசுத்தப் படுத்துகிறது.

***

பிரகஸ்பதி மண்டலத்திற்கு நான்கும், சனி மண்டலத்திற்கு எட்டுமாய் இப்படி மற்றக் கிரகங்களுக்கும் சந்திரன் உண்டென்றாலும், அவைகளும் அந்தந்தக் கிரகங்களுக்கு இதே விதமாய்ப் பயன் படுகின்றனவோ இல்லையோ அதைப்பற்றி நாம் இப்போது இங்கே விசாரிக்கவேண்டிய அவசியமில்லை. நம்முடைய சந்திரன், நமது 'சந்தமாமா' நமக்குச் சிறந்த நன்மைகளை விளைவிக்கின்ற மகோபகாரியாயிருப்பதால், இப்படிப்பட்ட சந்திரனை நமக்கு அளித்து நம்மைக் கருத்தாகக் காத்தருளும் கருணைக்கடலான கடவுளுக்கு நாம் என்ன கைம்மாறு காணப்போகிறோம்?

---

அடங்கிக்கிடக்கும் ஒரு சக்தி வெளிப்பட்டால், அதைப் பிறகு அடக்க முடியாதென்றே சொல்லும்வாறாக வலிமை கொண்டு பெருகி விடுகின்றது.

# முகம்மது நபி அவர்களின் வைபவம்.

(முன் பக்கம் 463-லிருந்து.)



யினும், மக்கா நகரத்தார் கடைசியில் மகம்மது நபிகளுடன் இருந்த அநேகரைக் கொடுமையாய்க் கொலை செய்துவிட்டனர். அந்த அக்கிரமத்தைப் பார்த்து மகம்மது நபிகள் அவர்கள் மேல் மிக்க கோபங்கொண்டு வெளியேபோய்ப் பெரும்படை கூட்டிக் கொண்டு வந்து ஜயசீலராய் மக்கா நகரத்தில் பிரவேசித்தார். பிறகு அவரை வெல்வதற்கு ஒருவராலும் சாத்தியப்படவில்லை. அங்குள்ள காபா என்னும் ஆலயமும் அவர்க்குச் சுவாதீனமாயிற்று. அதற்குள் புகுந்தவுடனே முகம்மது நபிகள் அங்குள்ள விக்கிரகங்களை யெல்லாம் நாசமாக்கிவிட்டு அதைத் தம்மதம் பரவுவதற்கு மூலஸ்தானமாகவைத்துப் பிரசங்கம்செய்து கொண்டிருந்து, கடைசியில் நோயினால் வருந்தி அறுபத்து மூன்றுவது வயதில் தேக வியோகமாயினர்.

***

மகம்மது நபிகள் மரணமடைந்தது மதீனா நகரத்தில். அங்கே அவர் இறந்த இடத்தில் சிறந்த மசூதி ஒன்று கட்டப் பட்டிருக்கின்றது. மகம்மதிய மதாபிமானிகள் அநேகர் பல தேசங்களிலுமிருந்து அவ்விடத்துக்கு யாத்திரை போய்வருகின்றனர். மகம்மது நபிகள் மரணகாலத்தில் பட்ட வருத்தம் கொஞ்ச நஞ்சமல்ல. ஆயினும், அவர் அவற்றால் சிறிதும் மனஞ்சலியாமல், இப்பொழுது நான் இவ்விடத்தில் எவ்வளவு சங்கடம் அனுபவிக்கிறேனோ, அவ்வளவுக் கவ்வளவு மேலுலகத்தில் மேலான சுகங்களைப் பெற்று வாழ்வேன் என்றே சொல்லிக் கொண்டிருந்தார். இவ்வுலகத்தில் நாம் அனுபவிக்கும் பல துன்பங்களும் நமது பலவகையான பழவினைகளும் கழிவதற்காகவே என்னும் உண்மை அவர் உள்ளத்தில் உறுதியாயிருந்தது போலும்.

***

கடவுளுடைய கட்டளையினால் நன்மையைப் போதிக்க வந்தவர் என்று மட்டும் சொல்லிக் கொண்டிருந்தார். கடவுள் ஒருவர் உண்டென்பதை நம்பி அவருக்குப்பயந்து அவரே தமக்குத் தஞ்சமென்று உறுதியாகக் கொண்டு நியாய மார்க்கத்தில் நடப்பவர்களைக் கடவுள் ஒருபோதும் கைவிடார் என்பதையே தமக்கு சித்தாந்தமாகக்கொண்டு அந்தத் தத்துவத்தையே அவர் யாவருக்கும் உபதேசித்து வந்தார். அன்றியும் நேசர்களிடத்தில் நன்றி மறவாதிருக்க வேண்டுமென்றும், சத்துருவாயினும் அவனுக்கு நாம் கெடுதி நினையாமல் நன்மையே நினைக்கவேண்டு மென்றும், எல்லாப் பிராணிகளிடத்தும் அன்பும் அருளும் உடையவர்களா யிருக்க வேண்டு

---

மனைவியின் சோம்பேரித்தனமும் முணுமுணுப்பும் உத்தம கணவனை உணவின்றிப் பட்டினியோடும் பரிதபிக்கச்செய்து தூங்கவைக்கிறது.

மென்றும் இத்தன்மையான நீதிகளை யே யாவர்க்கும் உபதேசிக்கலானர்.

***

மகம்மது நபிகளின் காலத்திற்குப் பிறகு அவர் பட்டத்திற்கு வந்த அவருடைய நண்பரான ஆபு பேக்கர் அவர் அப்பப்போது சொன்ன நீதிமொழிகளை யெல்லாம் திரட்டிச் சேர்த்துக் குரான் என்னும் மகம்மதிய வேத புத்தக மாக்கினர். அந்தக் குரானை ஆய்ந்து பார்க்குமளவில், மகம்மது நபிகள் தாமே சொல்லிய தம்முடைய சரித்திரமாகவே இருக்கின்றது.

***

அவருடைய வடிவம் பார்த்தாலும் பசி தீரும்படி அத்தனை கம்பீரமான தோற்றமுடையது. அவரிடத்தில் சவுலப்பியம் முதலிய மேன்மக்களுக்குரிய பல நற்குணங்களும், வெகு சாதுரியமாய்ப் பேசுந் திறமையும் பூரணமாய் அமைந்திருந்தன. இவைகளெல்லாவற்றிலும் அவரிடமிருந்த உதாரகுணம் மிகவும் விசேஷம். ஒருவன் வருந்துவதைப் பார்த்துச் சிறிதும் பொறுத்திரார். சிநேகிதர் விஷயத்தில் அவருக்கு ஆதரணை மிகவும் அதிகம்.

***

மகம்மதிய வேதமாகிய குரானில் நீதிபோதகமான சிறந்த மொழிகள் அநேகம் அமைந்திருக்கின்றன. கடவுள் ஒருவர் உண்டென்பதும், அவரைத் தொழுவது அவசிய மென்பதும் மகம்மதிய மதஸ்தர் அனைவராலும் அங்கீகரிக்கப் பட்டிருக்கின்றன. மத்தியபானம் செய்வது கூடாதென்றும் அதற்கு விரோதமாய்க் குடிப்பவர்கள் உண்மையான மகம்மதியர் ஆகாரென்றும் குரான் முறையிடுகிறது. இவை தவிர, வேறுவிதமான விபரீதங்கள் அம்மதாசாரங்களில் சொல்லப்படவில்லை. அம்மதத்தில் எவையாயினும் விரோதமான நடத்தைகள் உண்டானல், அவை யாவும் அந்தந்தக் காலத்திலிருந்த ராஜாங்கங்களின் பேதங்களாலும், அவரவரது அறியாமையாலும் விளைந்தவையே யன்றி வேறல்ல. (முற்றிற்று.)

"ஜநவிநோதினி"

## மனஸ்தாபபட்டுண்ணை யாற்றுவோர் பெறும் பரிசு!

ஒரு குடும்பத்துள்ளோ, நட்பு—அறிமுகம்—வர்த்தகம் இவற்றினுள்ளோ உண்டான மனஸ்தாபங்களைப் போக்கிச் சுகமான நிலைமையை ஏற்படுத்துவதற்கு, அதற்கு வேண்டிய சமாதான நிலையைத் தோற்றுவிப்பதில் எவ்வளவோ பிரயாசையிருக்கிறது. உள்ளம் நொந்தவர்களைச் சாந்தப்படுத்துவதற்கு அவர்கள் கோருகிற சில காரியங்களை நிறைவேற்றிக் கொடுக்கவேண்டியதாகவும் வரும். இவ்வளவு சிரமங்கட்குப் பிறகு ஏற்படுகிற சமாதானத்தில் கூடிக்கொள்கிற பிரிந்த இரு சார்பினரும் தங்கட்கு முதலில் துணையாகி, உதவி செய்த சமாதானக்காரனை மட்டும் மறந்துவிடுகின்றனர். இதுதான் இவர்கள் ஈந்திடும் பரிசு!

# கருத்து ஒன்றான ரகர றகரம்.

இருவகையான ரகர றகர எழுத்துகளும் உச்சரிப்பும்
வேறுபாடாயிருப்பினும் கருத்து மாத்திரம்
ஒன்றாயிருக்கும் மொழிகளின் முறை.



| எண் | மொழிகள் | கருத்து |
|---|---|---|
| 1. | அருத்தல்<br>அறுத்தல் | கொய்தல் |
| 2. | உலரல்<br>உலறல் | சினக்குறிப்பு, காய்தல் |
| 3. | கரடு<br>கறடு | சிறு குன்று |
| 4. | கருப்பு<br>கறுப்பு | கருமை |
| 5. | கருவம்<br>கறுவம் | கோபம், அகங்காரம் |
| 6. | கர்ச்சூரம்<br>கற்சூரம் | பேரீந்து |
| 7. | கல்லுருணி<br>கல்லுறுணி | புல்லூரி |
| 8. | கார்ப்பாசம்<br>காற்பாசம் | பருத்திப் பஞ்சு |
| 9. | தரை<br>தறை | பூமி |
| 10. | திரிகண்டம்<br>திறிகண்டம் | நெருஞ்சில் |
| 11. | சுருசுருப்பு<br>சுறுசுறுப்பு | சுருசுருத்தல், விரைவு, வேகம் |
| 12. | பரம்பர்<br>பறம்பர் | ஓர் சாதியார் |
| 13. | பார்க்குனம்<br>பாற்குனம் | பங்குனி மாதம் |
| 14. | பிரியகம்<br>பிறியகம் | வேங்கை |
| 15. | முரண்<br>முறண் | போர் |
| 16. | முரிதல்<br>முறிதல் | ஒடிதல், கெடுதல் |
| 17. | முருவல்<br>முறுவல் | சிரிப்பு |
| 18. | வரட்சுண்டி<br>வறட்சுண்டி | ஆடுதின்னாப் பாளை |
| 19. | வர்க்கம்<br>வற்கம் | குதிரைக் கயிறு |




---

சாதாரணமாக நமது கண்ணுக்கு ஆயிரம்தரம் எதிர்ப்படுகிற ஒருவரை நம்முடைய ஒரு காரியத்திற்காகக் காணச்சென்றால், அவர் நமக்குத் தென்படுவதேயில்லை. அவர்வீட்டில் இரவெல்லாம் படுத்துக்காத்திருந்தாலுங்கூட அவர் அகப்படுவதாய்க் காணோம்! அந்த சமயம்தான் 'பிகுவு' அதிகமாகிறது.




# முக்கியத்தைக் கவனிக்கிறதில்லை!



எந்த முக்கியத்தை விட்டுவிட்டது? எந்த முருங்கைக் காய் இல்லாமல் பத்தியம் முறிந்துப் போச்சுது? இந்த விகடக்கிழவன் என்ன முக்கியத்தை மஹா கண்டுகொண்டது? மற்றவர் என்ன காணமற்போனது? கலியாணப் பெண்ணுக்கு முக்கியம் இங்கும் "அங்கும்" தலை குனிந்திருத்தல்; விவாகத்தில் முக்கியம் சாந்தி; மானிடவுடலில் முக்கியம் மானமுள்ள உறுப்பு; அதில்லாவிடில் எந்த வாழ்வு வைபோகமுமில்லை; மேள—தாள—நாகசுரமுமில்லை; கல்வியில் முக்கியம் கவித்வசக்தி; மருந்தில் முக்கியம் தாய்ச்சரக்கு; வெளியூருக்கு ஓடினவனுக்கு முக்கியம் பணமூட்டை கட்டுதல்; உத்தியோகத்துக்கு முக்கியம் சம்பளம் உயரல்; குழந்தைகளுக்கு முக்கியம் தீர்க்காயுசு; காரிகையர்க்கு முக்கியம் கற்பு; விருந்தில் முக்கியம் குளிர்ந்த உபசரிப்பு; ஊர் போனவனுக்கு முக்கியம் நினைத்துவந்த காரியம் முடிதல்; நட்புக்கு முக்கியம் இருமனமும் ஒன்றுதல்; அன்புக்கு முக்கியம் அரவணைப்பு; வாழ்வில் முக்கியம உத்தமப் பெண்டீர்—இந்த நீதிகளைத் தான் விகடன் சொல்லியளக்க வந்தானுக்கும்! இது எங்களுக்குத் தெரியாததோ? இந்த விகட தாதா இந்தக் குப்பைகளைக் கட்டிக் கோபுரம் காட்டவேணுமோ என்பீர்களோ? சொல்வதற்கு முன்னால் இப்படி அவசரப்படலாமா? அவசரப்பட்டால் ஆகுமா? அதற்குள் கருப்பா சிவப்பா என்று முகத்தைப் பார்த்துவிட வேணுமா? ஆக்கப் பொறுத்தது அறைவரை ஆறப் பொறுக்கக்கூடாதா? கொஞ்சம் பொறுத்து, பொறுமையிலே பருத்துக் கேளுங்களேன்—சங்கதியை.

***

பத்து கீரைகளை வாங்குவதைவிட ஒரு உருளைக்கிழங்கு வாங்குவது எவ்வளவோ மேல்! நாலைந்து குழம்புகளை வைத்து நாலுமணிக்கு சோறு

---

செய்தது செய்துவிட்டு நேரில் போய் சமாஸம் செய்துகொள்ளத் தார இருக்கையில் நினைக்கிறார்கள். பின் அந்த மனிதனைக் காணுகையில் தங்கள் குற்றத்தால் அடங்கி நாண, வாய்ச்சொற்களும் சரியாக வெளிவருவதில்லை.

போடுவதைவிட, ஓர் மோர்க் குழம்பும் அதில் இரண்டு வடையும் போட்டு விடுவது எத்தனையோ திருப்தி! இத்தனை சோறு குழம்புகளுக்குப் பதிலாக ஒரு புலாவு சமைத்துவிடுதல் விருந்தாளியை வெகுவாய் உபசரித்ததாகிவிடும்! முப்பதுநாள் தன் கூட வைத்திருந்து உபசரித்தது பெரிதல்ல; அவர்கள் புறப்பட்டு விட்டபோது இன்னும் ஒரு வாரத்துக்காவது இருக்கவேணுமென்று சண்டையிட்டு அவர்கள் பெட்டிகளை உள் வீட்டில் வைத்துப் பூட்டிவிட்டு வேண்டிக் கொள்வது எவ்வளவோ அன்பும் ஆசையுமான செய்கை! இதை எதிர்க்க எவருக்கும் சக்தியில்லை! பிறகு கடிதம் வரும் என்று ஒரு வரி தன் உயிருக்குயிரான ஒருவருக்கு எழுதிவிட்டு அந்தப்படி ஆசையுடன் உட்கார்ந்து 60000000 பக்கங்கள் எழுத நேரம் கிடைக்காமல் நாளைப் போக்குவதைவிட நாலு வரிக் கடிதமாவது அனுப்பி விடுவது சிலாக்கியம்! இப்படி முக்கியத்தைச் செய்யாமல் அதை மூலையில் போட்டு விட்டு உதவாததைத் தொட்டுக் கொள்வதில் என்ன பயன்? எது முக்கியமோ அதைக் கவனிக்கிறதில்லையே!

***

"விகடமொன்று வேணும், வீண் பேச்சுமொன்று வேணும், அகஸ்யமொன்று வேணும், அதிலுஞ் சிறிது அருத்தம் பொருத்த மிருக்கவேணும்" என்று இந்த விகடனுக்கு நெடுங்காலத்து அண்ணுவான ஈப்போ "இந்திய மித்திரன்" ஆசிரியர் சொன்னாராம்! அவர் வாய்க்குச் சீனு கல்கண்டு போடவேணும்! விகடம் என்றால் என்ன, சாமான்யமா? சிரிக்கவைக்கும் சரக்கு எத்தனையோ படித்தவர்களுக்கும் கிட்டாமற்போக, எதுங் கல்லாத ஒரு கோமாளிக் கட்டையன் எதெதையோ பேசி ஒரு நிமிஷத்தில் கொல்லென்று சிரிக்க வைத்துவிடுகிறான்! அந்த சக்தி படித்த பூசனிக்காய்க்குக் காய்க்கிறதில்லை! அதது பிறவியி லமைப்பு! அது கருவிலேயே ஆன உருவு! ஒருவன் நாளெல்லாம் யோசித்து ஒரு பாட்டு எழுத, மற்றொருவன் ஒரு மணிக்குப் பத்துப்பாடல் எழுதிக் காட்ட, "ஆமப்பா உன் பத்து பாடல் பத்து நிமிஷத்தில் மறையும், என்னொரு பாட்டோ பல வருஷத்துக்குமிருந்து பரிமளிக்கும்" என்றாலும்! எதிலும் நல்ல உறுதிச் சரக்கு முக்கியமாகவேணும்! பத்து உதவாக் கத்திகளிருப்பதைவிட நல்ல உருக்குக் கத்தி ஒன்றிருந்தால் போதும்! எதிலும் முக்கியத்தைக் கவனிக்கிறதில்லை!

***

பேச்சு வெகு பஞ்சாமிர்தம்! உபசாரமோ மிக மிகத் தித்திப்பு! ஊரிலிருந்து வரும்போதெல்லாம் தவறாமல் ஏதேனும் பக்ஷண தினுசுகள் கொண்டுவருவது! முறுக்குக்கு மாவு கூட இடித்துக் கொண்டுவந்து இங்கு சுட்டு யாவருடனும் கூடி உண்டு குலாவுவது! மிக்க வேண்டியவர்களாகக் குலுக்குவது! இப்படியெல்லாம் தளுக்கு செய்கிறார்களே தவிர, தங்களுக்கு இருக்கிற ஏராளமான சொத்தில் ஒரு நகை நட்டு கூடப் போட்டவர்களாக இல்லை! ஒரு காணி நிலமாவது எழுதி வைத்

---

தவர்களாக இல்லே! கொண்டாடுகிற உறவோ—தாமே முதல் பாத்தியக் காரர்களாகவும், யாவரையும் விட அதிக அதிகார முள்ளவர்களாகவும் உயர்த்திக் காட்டிக் கொள்கிறது! ஒரு சேலேயை மூன்று ரூபாயில் எடுத் துப் புறட்டிவிட்டுத் தான் எவ்வள வோ செய்துவிட்டதாய் எண்ணி விடு வது! அந்த அற்பத்திலே அவர்கள் மகிழ்ந்து மயங்கிப் போவார்களென்று நினேத்துக் கொள்வது! மூன்று ரூபாய்க்குப் பதிலாய் ஒரு நல்ல பட் டுப் புடவையாக, காலமுழுதுக்கும் இன்னர் வாங்கித் தந்ததென்று சொல்லிப் பத்திரப் படுத்தும்படியாக ஒரு ஐம்பது ரூபாயில் எடுத்துக் கொடுத்துவிடுகிறதுதானே! அதற்குக் கை வருகிறதில்லே! மூன்று ரூபாய்த் துணி யெடுக்கத்தான் சின்ன புத்தி போகிறது! ஆனல், நடந்து கொள்ளு கிற பிரியமும் ஆதரவுமோ வெகு அதிகமாயிருக்கும்! அந்தப் பல்லக் குக்குத் தக்கபடி முக்கியத்தைக் கவ னிக்கிறதுமில்லே செய்கிறதுமில்லே! மொத்தமாகஒன்றைக்கொடுத்துஅதை கரையாத சொத்தா யிருக்கப்பண்ணி உதவுவதில்லே! மூன்று காசு சுண் டல் வடை வாங்கிக் கொடுத்துவிட்டு அதில் ஒரு திருப்திபட்டுப் போகிறது! கடைசியில், தன்னிடம் பிரியம் வைத் தவர்கள் தன்னிடம் இருந்து எதுவும் பெருமற்போக, தன்னே விரோதித் துக் கொண்டவர்கட்கே எல்லாவற் றையும் வைத்துவிட்டுக் கண்ணே மூடிக்கொள்கிருர்கள். முக்கியத்தைக் கவனியாததில் இது ஒரு தினுசு!

***

உனக்குத் தான் அந்த நிலத்தைக் கொடுக்கப்போகிறேன், அந்த வீட் டை உன் மகன் பேருக்கு எழுதி வைத்துவிடுகிறேன், நான் கழுத்தில் போட்டிருக்கும் வைரக் கொலுசை நீயே எடுத்துக்கொள்ளு; பெட்டியி லுள்ள பட்டுப்புடவையெல்லாம் நீயே கட்டிக்கொள்ளு, உனக்கு எதெது வேண்டுமோ அதை யெல்லாம் நீயே பூட்டிக்கொள்ளு என்று வெகு நீட் டஞ் சாட்டமாய்ப் பேசுகிறது! அதில் மயங்கிய வீட்டுக்காரி காப்பியும் பலகார விருந்துகளுமாய் நடத்தித் தள்ளுகிறது! இப்படிப் பேச்சு பேசுகிறதைத் தவிர, மூளியாய்க் கிடக்கிற அந்தக் காதுக்கு ஒரு கம்ம லோ தோடோ வாங்கிப்போட்டு அந் தப் பொத்தலேச் சரிப்படுத்துகிற தில்லே! பிறந்த மேனியாய் உடம் பில் எதுமின்றிக் கிடக்கிற குழந்தை களுக்கும் ஒன்றும் செய்து போடுகிற தில்லே. ஆனல், வெண்ணெய் காய்ச் சிய நெய்யில் அதிரஸம் சுட்டுக் கொண்டு வருகிறது! அது அந்த நானே தின்று முடிந்து மலமாய்ப் போய்விடுவது! ஒரு வண்டி வைத்து ஏறிப்போனல் அதற்குள்ள வாடகை யைத் தான் தராமல், மெதுவாக இறங்கி ஒரு பக்கம் நின்றுகொள்வது? இவர்களின் ஜாடை கண்ட மற்றவர் கள் அந்தப் பிச்சை வாடகையைத் தாங்களே கொடுத்துவிடுவது! இதில் இப்படிக் கருமித்தனத்தைக் காட்டி விட்டுப் பிறகு அந்தக் குழந்தையைத் தூக்கிக் கொஞ்சுவது! இந்தக் குழந் தையை எடுத்து முத்தமிடுவது! ஒரு காசு சக்கரை மிட்டாயி வெகு பிரி யத்தோடு வாங்கிக்கொடுப்பது! வீட்டு வேலேயெல்லாம் பிறர் செய்வதைக் கூடத் தடுத்துத் தானே முந்திக் கொண்டு நின்று செய்வது! இன்னும் எட்டி முட்டி கிட்டி ஒட்டி கட்டி

---

ஒவ்வொருவருக்கும் வெவ்வேறு பணச் செலவுகள் எப்படி யெப்படியோ நேர்ந்துகொள்ளுகின்றன. விசாரங்களும் அவ்வாறே! அவற்றை யெல்லாம் நாம் குறைக்கப் பார்த்து உதவி செய்வதற்கு சாத்தியப்பட்டு வருகிறதில்லே.

ஒன்ருய் இரு உடம்பு ஒரு உடம் பாய்ப் பொருந்திக்கொள்வது! இவ் வளவே தவிர, ஒரு கனத்ததைச் செய்யக் கை நீளுகிறதேயில்லை! கடைசியில் எதுவுமே தாாமல் பச் சைப் பல்லாக்கில் ஏறிக்கொண்டு கோவிந்தா கோவிந்தா என்று போய் விடுவது! இவர்களை நம்பி மனக் கோட்டை கட்டியவர்கள் ஏமாறி முகம் மாறி நாறுகிறது! இப்படி யெல்லாம் முடியவைக்கிறதே தவிர, முக்கியத்தைக் கவனிக்கிறதில்லை!

***

மற்றவர்களுக்குக் கொடாவிட்டா லும் இவர்களாவது நன்ருய் உண்டு உடுத்துத் தின்னுகிருர்களா? அநுப விக்கிருர்களா? அதுவும் கிடையாது. ஒரு காலணு கீரையிலே அதை நக்கிக் கொண்டு பொழுது போக்கிவிட்டு, வெளிடம்பத்துக்கு எவரெவருக்கோ செய்து தொலைப்பார்கள்! அந்த உத்தியோகஸ்தன் வந்ததற்கும், இந் தக் கவுன்சிலர்-போர்ட்மெம்பர் பதவி களுக்கும், ஆயிரம் ஆயிரமாக இறைத் துக் கொட்டுவார்கள்! இதில் இத் தனை வீண் விரயம் செய்துவிட்டு, வீட்டு வேலைக்காரனுக்குக் கொடுக்க வேண்டிய நாலு மாத பாக்கிச் சம்ப ளத்தை இன்னும் கொடாமலே அவன் வயிற்றில் அடித்துவிடுவார்கள்! இந்த நாறும் அவிவேகக் கட்டைகள் முக் கியத்தைக் கவனிக்கிறதேயில்லை!

***

பத்துவகைக் கறியும் பாங்காய் சமைத்துப் பல விருந்துகள் படைத் துப் பக்கத்திலே உட்கார்ந்து வெகு பிரியமாய்ப் பேசுவது. ஆனுலோ, அந்த மனிதன் எதற்காகத் தன்னை நாடி வந்தானே அந்த சங்கதியிலே ஒன்றும் செய்யாமல் எய்த்து, அவன் கண்ணைத் துடைத்து எல்லாம் பிறகு ஆகட்டும் என்று அனுப்பிவிடுகிறது. "பிறகு" என்பதிலே இந்த ஐயா கண் மூடியபிறகா?—அல்லது உதவி கேட்கவந்த நஞ்சான் குஞ்சான் நரக லோகம் போனபிறகா?—என்பது என்றைக்குமே தீராத சந்தேகம் தான்! இதுவும் முக்கியத்திலே முழு மொட்டை யடிக்கிற சங்கதியே!

***

அம்மாவும் அப்பாவும் சங்களின் ஆநந்த அவசர மயக்கத்திலே கத வை மூடித் தாள் இடுதலாகிய முக்கி யத்தைக் கவனிக்கிறதில்லை! நடுநோ நிசியிலே பயந்துவிட்டு அவர்கள் குழந் தை தன் பக்கத்திலே இருவரையும் காணுது அறை வீட்டிற்குள் வந்து விடுகிறது! திருட்டுச் சிறிக்கியும் திம்மராயனும் அதன் முன்னுல் திரு டர்களைப்போல அகப்பட்டுக் கொள்கி ருர்கள்! அதுவும் தன் தூக்க மயக் கத்திலே அம்மா பக்கத்தில் படுத்துக் கொள்ள வருகிறது. இது பூஜை வேளையிலே கரடியை விட்ட கதை! முக்கியத்தை முதன்மையாய்க் கவ னிக்க மறந்ததில் இந்த அவதி!!

***

தான் எதிர்ப்பட்டவனை வெகு பிரியமாய் க்ஷேமம் விசாரிக்கிறது! பார்த்து ரொம்ப நாளாச்சுதே, அவர் கள் க்ஷேமமா?—இவர்கள் க்ஷேமமா? உங்கள் பாட்டி க்ஷேமமா? வெகு நீண்டகாலத்து அம்மா அது—என்று வெகு கனிரஸமாய் மார்போடு மார்பு தழுவிக்கொள்கிறது! கடைசியிலே தன் வீட்டுக்கு வா அப்பா என்று ஒருவேளைப் புசிப்புக்கு அழைக்கிறது தான் கிடையாது! அவர்களும்

---

தன்னை எதிர்பார்க்காதபடி, எங்கே யப்பா வந்தே, எங்கேயப்பா போகிறே என்று—தானே ஒரு கேள்வியைத் தொடங்கிக்கொண்டு, அந்தக் கேள்விக்கு அவன் ஏதாவது தலையை யாட்ட, அதைத் தொடர்ந்த பேச்சாக, அப்படியா, போய்வருகிறாயா, போய்வா அப்பா, திரும்பும்போது வந்துவிட்டுப் போ என்று உபசாரமும் ஒட்டிய உறவுமாய் தன் கை கடிக்காதபடி பேசி அனுப்பி விடுகிறது! அட ஆண்டவனே! இப் படிப்பட்டவர்களுக்குத் தானடா அப்பா வேத நல்ல பேரு! ஆக்கிக் கொட்டி உடம்பைச் செருப்பாகப் போட்டு உழைத்தவர்களுக்கு என்றைக்குமே அநியாயச் சொல்தான்! இப்படி இவர்கள் ஒரு சின்ன காசு கூடச் செலவாக்காமல் இனிக்க இனிக்க இளித்துவிட்டுப் போய் விடுவதைத் தவிர, ஒரு இம்மியாவது ஒரு முக்கியத்தைக் கவனித்து அதற்கு சகாயமாய் உதவுகிறதாவது செய்வதாவது கிடையவே கிடையாது!

***

காலை முதல் இரவு வரை உடம்பை இடுப்பொடியுமட்டும் வீட்டு வெள்ளாட்டி அவ்வளவுக்கு வெகு வாய் உழைத்து வேலை செய்வாள்! ஆனால், அவள் வீட்டுக்காரன் முதுகு நோகிறது, இப்படிக் கொஞ்சம் பிசைந்து விடடி என்றால், ஆ! நான் காலை முதல் உழைத்து உடம்பெல்லாம் குத்துகிறது, என்னால் முடியுமா என்று கோணிக்கொண்டு போய் விட, அதில் அவனுக்கு மனது கசந்து அடி பாவி! உனக்கும், நீ பொத்து பொத்தென்று போட்ட பிள்ளை குட்டிகளுக்கும் தானே இத்தனை உழைக்கிறேன், இவ்வளவு பிசைந்து விடக்கூடாதா என்று வாய்விட்டு வயிறு எரியச் சொல்லி விடுகிறான்! செய்யவேண்டிய முக்கியத்தைச் செய்கிறதில்லை! வீட்டுக்காரன் உடம்பு குளிக்கையிலே அவன் முதுகைத் தேய்த்துவிடுகிறதுமில்லை. அந்த சமயம் என்னவோ பாழாய்ப்போன ஒரு வேலையைத் தொட்டுக்கொண்டு விடுகிறது! இது என்ன புத்தியோ? சிறு வேலையானாலும் அது வெகு முக்கிய மாச்சுதே! அதை இந்த முழு மூடங்கள் ஏனோ கவனிக்கிறதில்லை!

***

ஒரு பிரியமானதை அதிகப்பணம் கொடுத்து வாங்கித் தந்துவிடுகிறது! அடுத்த நிமிஷத்திலே சிள்ளென்று பட்டு நெருப்பாய் எரிந்து விழுகிறது! அந்த அருமைப் பண்டத்தைக் கையால் ஆசையோடும் வாங்கியவர்கள் ஸந்தோஷப்படுவதற்குப் பதிலாகக் கண்ணீர் விடுகிறது! இதில் என்ன லாபமோ ஈசா! வாங்கிக்கொடுத்த அருமையுடனேயே ஆதரவும் அன்புப் பேச்சுமாகப் பேசி ஸந்தோஷப்படச் செய்தால் எவ்வளவோ இனிமையாயிருக்குமே! அந்த முக்கியத்தை முதலில் கவனிக்கிறதில்லை! இப்படியும் உண்டா சின்ன புத்தி!

***

வெகு பிரியமாய் வீட்டோடு திருவிழாவுக்கு வண்டி யேறிப் போய்ப் பார்ப்பது! ஆனாலோ புறப்பட்ட ஸந்தோஷம் திரும்பி வருகிறபோதில்லை! ஏன் இல்லை யென்றாலோ, போன இடத்திலே ஒரு அற்பத்துக்குச் சண்டை யிட்டுக்கொண்டு, அடிதடி பிடியாகி, எவ்வளவுக்கு ஏச பேசத் தெரியுமோ அவ்வளவுக்கும் சண்டையிட்டுவிடுகிறது! அந்த நொந்து

---

நூற்கருத்து உணருமுன்னர் அதனை இகழற்க. இகழுஞ் சிரத்தையுடன் பிற மத நூலெதனையும் நோக்கற்க. நீ இகழ்தலால் அது குன்றிவிடாது.

நோவெடுத்த மனதோடே வீடு திரும்புகிறது! இப்படித் திரும்புவ தற்கு நடுவிலே வழியிற்கண்ட வடை வாழைப்பழம் பக்ஷணங்களை வாங்கிக் கொடுத்துக் குலாவப் பார்க்கிறது! திட்டுகள் திவ்யமாய்க் கேட்டவர்கள் வெறுப்போடு இவர்கள் தருவதை வாங்கி ஒருபக்கத்திலே போடுகிறது! அந்த லக்ஷியத்தைப் பார்த்து ஆத்திரம் மிஞ்சிப் பல்லைக் கடித்துச்சொல்லை வாய்க்குள்ளாகவே வைத்து அடக்கிக் கொள்கிறது! எனப்பா இப்படி? சந்தோஷமாய்ப் புறப்பட்டுப்போனது போலவே, அற்ப சொற்பங்களுக்குச் சண்டையிடாமல் மனதொத்துப் போய் ஸந்தோஷமாகவே திரும்பி வருகிறதுதானே! அந்த முக்கியத் தைக் கவனிக்கக் காணோமே தேவா!

***

குழந்தைகளுக்கெல்லாம் வெகு பிரியமாய்த் தலைசீவி ஜடைபோட்டு சிங்காரித்துவிட்டுப் பூரிப்பது! அப் பாலே அடுத்த நிமிஷத்திலே அவர் களை அடித்து மையிட்ட கண்களிலே ஜலம் பெருகிக்கொண்டு அழும்படிச் செய்து அவலக்ஷணமாக்குகிறது! சிங்காரித்ததுபோலவே சிரித்து விளை யாடிக்கொண்டிருக்கும்படியும் செய்வ தல்லவா முக்கியம்! அதை மறந்து போகிற அவதிதான் எங்கெங்கும்! முக்கியத்தைக் கவனிக்கிறதில்லை!

***

அவ்வளவு உபசாரங்கள் அந்தக் கொண்டவனுக்குச் செய்கிறது சரி தான்! ஆனல், அவன் விருப்பமாய் எதிர்பார்க்கிறதிலே முகம் கோணிக் கொண்டு சிடுசிடுக்கிறது! அதில் அவன் மனம் வெறுத்து வெகு சங்க டத்திலாகும்படிச் செய்துவிடுகிறது! அதிலே அவன் ரோசம் மேலிட்டு மீறி வீட்டைவிட்டுத் தாசிலோலனுய் விடு கிறது! பிறகு அவன் வாங்குகிற சம்ப ளம் தன் வீட்டுக்கு வராமல் எங்கே யோ போய்விடுவதைக் கண்டு நொந்து கொள்கிறது! முக்கியத்தைக் கவ னித்து இசைந்து நடந்துகொண்டி ருந்தால் இப்படி யெல்லாம் ஆகுமா?

***

எதிலும் முக்கியத்தைக் கவனிக்க வேண்டும். கோயிலுக்குப் போவதில் பத்து நிமிஷங்களாவது தன் மனத் தைக் கடவுளிடம் செலுத்தித் தியா னித்துத் தன்னை மறந்து அந்த பக்தி யில் பரவசப்படுகிற தன்மையிலிருக் கப் பார்க்கவேணும். இவ்விதமே, வீட்டுப் பூஜை வேளையிலும் தன் மனதை இழுத்துப்பிடிக்கவேணும். ஆனமட்டுக்கும் உபயோகமான காரி யத்தைச் செய்கிற முக்கியத்தில் இறங்கவேண்டும். சந்தோஷமாகவே பொழுது போக்கிவிடுகிற முக்கியத் தில் கருத்தாக வேண்டும். கடன் படாத முக்கியத்தைக் கவனித்துச் செலவுகள் செய்யவேண்டும். அவசி யத்தைக் கவனித்து முக்கியத்தைச் செய்யக் கடன்பட்டாவது முடிக்க வேண்டும். முக்கியத்தையும், பின்னல் நேர இருப்பதையும் முதலில் தன் மனதிலே பொத்திக்கொண்டு காரியா காரியங்கள் செய்யவேண்டும்! விரதத் தின் முக்கியத்தை மறந்துவிட்டு ஆருத்திரா தரிசனத்தின்போதும், வைகுண்ட ஏகாதசியின்போதும் வயிற்றுக்குள்ளே தோசைகளும் பக்ஷ ணங்களும் தள்ளி உப்ப வைத்துக் கொண்டே யிருந்தால் பக்தி பழுத்து விடுமா?—விரதம் பலித்துவிடுமா? மணமில்லா மலர் ஏதுக்கு? முக்கியத் தைக் கவனிக்கிறதில்லை! அதைக் கவ னித்து எதுவும் செய்வதில்லை! செய்து நலம்பெறநாடுவதில்லை! இனி யாவது கவனியுங்கள்! ராம்! ராம்! சுபம்! ஶு! சுவாஹா!!



தந்தையும் குழந்தையும் ஏககாலத்தில் போட்டி போடுதல் ஒரே நங்கையிடந்தானும்!

***

விவாகத்தில் தம்பதிகள்மீது போடுகிற அக்ஷதை யரிசி முதலியவை புரோகிதர் தலைமீது தானும்!

***

குடியேற்ற நாட்டந்தஸ்துப் பேச்சுக்கள் முடிந்து அதை இந்தியா பெறுவதற்குள் பால் குடிக்கும் குழந்தை நாலாவது தாத்தா ஆகிவிடுமாம்!

***

"காணாதது" கண்டவன் கம்மென்றடங்கி, தான் கண்டதாக எவரிடமும் சொல்லவே மாட்டானும்!

***

விவாக தம்பதிகளை ஆசீர்வதிக்கிற மகாநுபாவர்களின் மஹா யோக்கியதையை யறிய ஒரு புதிய கண்ணாடி கண்டுபிடிக்கப்பட் டிருக்கிறதாம்!

***

கையில் கிடைத்ததை விட்டுவிட மனமில்லாமல், இதோ கொடுக்கிறேனென்று சுருட்டிக்கொண்டு ஓடிவிடுபவர்களுக்கு முத்து—மரகதம்—பவளம்—என்று பேரிடவேண்டுமாம்!

***

அவளது இவனதாக, இவனது அவளதாக இன்பமேவி இஇஇ ஈஈஈ என்று கந்தர்வரொருவர் பாடினாராம்!

***

திரும்பித் திரும்பி, பின்னும் பின்னும், வந்து வந்து, குந்தி குந்தி, விருந்து விருந்து, தின்று தின்று, கூடிக்கூடி, சிரித்துச் சிரித்தோர், பின் கலகம்—திரித்து—பிரித்து—விரைத்து—முறைத்து—கனைத்து—குதித்து—தடித்து—வருவதை நிறுத்துவாரானால் பாதிமூட்டை யரிசியும் பலசெலவுகளும் மிச்சப்பட்டுவிடுமாம்!

***

இரவில் விழித்துப் பகலில் தூங்கினால்காணும் கனவுக்குப்பலன் ஏதுமே இல்லாமல் செய்துவிடலாமாம்!

***

தம்பி மாமிவீடு போனானென்றால், அந்த மாமி வீட்டார் அவன் க்ஷேமத்தைத்தவிர அவன் அண்ணன் க்ஷேமத்தைக் கவனியார்களாம்! அண்ணன் சொத்தும் தம்பிக்கு வாராதா என்பார்களாம்!

***

பொறுமைப்பாடம் வெகு நன்றாகக் கற்றுக் கொள்ளச் செய்வது கொசுக்களும் ஈக்களுந்தானும்!

***

உண்பது நாழி, உடுப்பது நான்கு முழம்; கலகங்கள் மட்டும் எண்பது கோடியாம்! கடைசியில் பல பிரிவே!

***

வைத்த இடம் தவறி வேறிடமானால், எத்தனை நெருப்புப்பெட்டிகளிருப்பினும் சமயத்திற்கு இரண்டு குச்சிகள் கூடக் கிடைக்காதாம்!

---

ஒருவருக்கு சீக்கு அதிகப்பட்டு அதனால் வெளியூரிலுள்ளவர்களுக்குக் கடிதம் எழுத நேர்வதில், அவர்கள் வந்து போவதற்குள் ஆகும் செலவுகளும் கஷ்டங்களுமோ என் அப்பா எழுதினேமென்று ஏங்கவைத்து விடுகிறது.

அகப்பேய் சித்தர் பாடல்.

11

ஆத்தோடு போனாலும் அகப்பேய்
அவ்வோடக் காரனுக்கு,
சாத்தியே தாராதே அகப்பேய்
தாம்பிரச் சல்லியுமே !

12

பாக்கியம் வந்தாலும் அகப்பேய்
பாடுபட்டுத் திரிவாய்,
யோக்கியம் பார்க்காதே அகப்பேய்
உள்ளதைச் சொன்னேனே !

## இந்த மாதம்.

இந்த மாதம் இனிதாகியதோர் மாதம். இன்பம் நல்கிடும் மாதம். நல்ல மார்கழி மாதம். புண்ய மாதம். பாற்கடலில் அனந்த சயனத்தின்மீது ஹரி துயிலமர்ந்த அருட்கோலத்தை அரங்க நகர் சேர்ந்து சேவிக்கும் மாதம். வைகுந்த ஏகாதசி வரும் மாதம். எங்கள் இயேசு பிறந்த மாதம். மான்மழுவேந்திய கையும், கங்கை தங்கிய சடையும், மதிவதிந்த மௌலியும், கடுவமர் கண்டமும், உமையவர் உருவமும், நெற்றியிற் றிகழ்ந்தவொற்றைநாட்டமும், எடுத்த பாதமும், தடுத்த செங்கையும், புள்ளியாடையும் ஒள்ளிதின் விளங்க, உருவக நர்த்தனத்தைப் புரிந்த சிற்சபேச வள்ளலெங்கோவைத் திருவாதிரை நாளில் வந்தித்திடும் மாதம். "சிற்றம்பலமும் சிவனும் அருகிருக்க—வெற்றம்பலந் தேடி விட்டோமே" என்றார் எம்மையாண்ட பட்டினத்தடிகள். "ஆலயமே காயம்—அறிவே சிவலிங்கம்" என்றார் எங்கள் ஞானமூர்த்தம். அங்கு இந்த மாதம் அன்புருவாகச்சென்று தரிசித்துப் பக்திப் பரவசராய்ப் பேரானந்த மெய்திடுக.

அன்பே வருக, அமிர்த குணபோதினியே வருக, ஆநந்தமாய் வருக, இன்சொல்லாய் வருக, இனிய முகத்துடனே வருக, ஈசனருளால் வருக, உற்சாகமாய் வருக, ஊக்கமுடனே வருக, என்னிருகண்ணே வருக, ஏகாந்தமாய் வருக, ஒப்பிலா மணியே வருக, ஓதும் தமிழே வருக, அக்கரையுடனே வருக, ஔவையின் அருந்தமிழே வருக, கவிபூஷணனே வருக, கற்பகத் தருவே வருக, கணபதியருளால் வருக வருக வருகவே. (S. M. சொக்கலிங்கம்.)

கைம்பெண்களை அவர்கள் தாங்க முடியாத வைதீகாசாரத்தை அனுஷ்டிக்கும்படி பலவந்தப்படுத்துவது மதிமோசத்தையும் தீராத் துயரத்தையும் பிறகு விளைக்குமென்பது திண்ணம்,




## போலி நண்பர்களின் ஸ்தோத்திர பாடம்!

அன்பீர்,

நான் ஒரு ஆங்கிலப் பத்திரிகைக்கு உதவி ஆசிரியன். நான் திரைக்குள் இருந்தாலும் என் பெயர் வெளியில் வராமல் இல்லை. என் பெயரால் இரு நூல்களும் வெளிவந்திருக்கின்றன. என் காரியஸ்தலத்தில் என்னை வந்து காண்போர் சிலருண்டு. ஒருநாள் என் மேஜையில் ஒரு கடிதத்தைக் கண்டு அதைப் பார்க்கையில்பின்வருமாறு இருந்தது.

ஃ

அன்பு கெழுமிய ஐயா,

" தங்களுடன் கொஞ்சம் சாவகாசமாய் சில விஷயங்களைக் குறித்துப்பேசவே நான் இங்கு இரண்டு முறை வந்தேன். தங்களது சொந்த வேலைகளைக் கவனிக்கும் சமயமாயிருந்தபடியால் நான் பேசுதற்குக் காலம் ஒத்துக்கொள்ளவில்லை. இதைத் தயவு செய்து ஒழிந்த நேரத்தில் வாசித்துப் பதிலளிப்பின் நலமாயிருக்கும்.

சமீபத்தில் நான் ஆங்கில நாட்டு நூலாசிரியர்களில் முக்கியமாக ஸர் வால்டர் ஸ்காட், மில்டன், ஜான்ஸன் முதலியோரின் நூல்களைப் படித்தேன். அந்நூலாசிரியர்களின் ஜீவியத்தையும் வாசித்தேன். அதில் அவர்களின் நடை, குணம், முதலியவைகள் பெரிதும் விஸ்தரிக்கப் பட்டுள்ளன. அன்னோரின் விஷயங்களைக் காட்டிலும் அபரிமிதமாகத் தாங்கள் எழுதும் வன்மையைப் பெற்றிருக்கிறீர்கள்.

தங்கள் நூல்களைப் படித்தது முதல் நான் அதே ஞாபகமாகவும் அனுஷ்டிப்பதிலுமே கண்ணுயிருக்கிறேன். Smiles என்னும் நூலாசிரியர் என்ன தன்னுடைய நூலில் எழுதியிருக்கின்றாரோ அந்த குணங்கள் தங்களிடம் இயற்கையாகப் பொருந்தியிருக்கின்றன. அந்த ஆசிரியருக்கு ஆங்கில நாட்டில் இருக்கும் பிரக்யாதி தங்களைப் போன்ற உண்மை ஆசிரியர்களுக்கும் ஏற்பட வேண்டாமோ?

ஒரே விஷயம்; தங்களிடம் தினம் ஒருமணி நேரம் என்னைப் பயிற்சிக்கு வைத்துக் கொள்வீர்களா? தங்களுக்கு உதவியாக வேலை செய்யவே விரும்புகிறேன். நல்ல குணமும், நன்னடக்கையும், நல்லறிவுமே அடியேன் ஆசிக்கிறேன். சோம்பேரித்தனத்தினின்றும் விடுபடத் தாங்களே எனக்கு வழி காட்டவேண்டும்." S. A. K.

ஃ

என்னைப் புகழ்ந்து வரைந்துள்ள இக்கடிதத்தைக் கண்டு கவலையானேன். இதை எழுதியவர் என்னிடமிருந்து என்ன பெற விரும்புகிறரென்று யோசித்தேன். ஏதாவது இ

---

பகவத் சிருஷ்டி அதிவிநோதமானது. அணுவும் மகத்தும் தனிமுதற் கடவுள்மாட்டே யுள்ளன. "யாரே உன் அதிரேக மாயை யறிவார்" என்றார் கவிச்சக்ரவர்த்தியும், சிருஷ்டியின் மகிமையை யுணரப் பேரறிவு வேண்டும்,

வல் புஸ்தகம் பெற்றுப் படிப்பதற்கு இந்தத் தித்திப்புக் கடிதம் நுழைக்கப் பட்டதோ என்றும் சிந்தித்தேன். சிலருக்கு வசீகரமாக வரைய வருகி றது. ஆனல், குணப்போக்கோ எழு திய எழுத்துக்கு முற்றும் மாருக இருக்கின்றது. என்னை மயக்கும் வரி கள் இக்கடிதத்தில் வெகு பிரயாஸை யுடன் பொறுக்கிச் சேர்க்கப்பட்டிருக் கின்றன. அக்கடிதத்தின் மீது பின் வரும் குறிப்பை வரைந்தேன்.

ஃ

"கடிதம் அழகிய வசீகரச் சொற் களில் மிக்க இனிமையோடும் தொடுக் கப்பட்டு நறுமணம் கமழ்கின்றது. இவ்விதமே நேரில் சந்தித்தஞான்றும் பிற்றை ஞான்றும் பரிமளம் பொருந் திப் பக்குவமுறுமாயின் பாங்குடைத் துதான். சந்தித்த காலத்தில் **பரஸ் பரம் வசீகரித்தலான மின்ஸாரம்** எத்துணை வேகமாய்—அல்லது மந்த கதியாய் நிகழ்கின்றதோ, அதைப் பொறுத்தே பிந்திய தொடர்பின் கயிற்று உறுதியும் இருக்கும். இவ்வுல கில் உத்தம நட்பாளர் மிக்க அபூர்வம். தமக்கு ஒரு உயர்பதவி கிடைப்பின் உடனே நட்பு மாறி வேருகி விடுவர். இவாது நேசம் எவ்வளவுக்குத் தொட ருமோ? முன்பு ஏமாறிய அநுபவங்கள் பலபல நீள நினைக்க வைக்கின்றன."

ஃ

இதற்குப் பிறகு மறுநாள் கடிதம் எழுதியவர் வந்தார். குறிப்புணர்ந்து 'தாங்கள் தானே வரைந்தது' என்றேன். 'ஆம்' என்ருர். நான் வரைந்த குறிப்பை அவரிடம் தந் தேன். ஒரு மணி நேரம்போல் பேசி விட்டுச் சென்ருர். அவருக்குச் செல விட்ட ஒரு மணிநேரத்தை மறுபடி பெறுதற்கு அவசரமாய் என் அலுவல் களைக் கவனித்தேன். அடுத்த தினம் ஒரு புஸ்தகத்தை என்னிடம் தந்து பார்க்கச் சொன்னர். உடனே பார் த்து அப்பொழுதே கொடுத்து விட் டேன். அன்றும் ஒரு மணிநேரத்தை அபகரித்துக்கொண்டார். பிறகு இன்னொருநாள் சந்தித்துப் படிப்ப தற்கு ஏதாவது புஸ்தகம் தருமாறு வேண்டினர். இவர் இவ்விதம் இர வல் கேட்கக்கூடுமென்றே அவர் புஸ்தகத்தை உடனே நான் திருப்பிக் கொடுத்ததாகும். ஏனெனில் இதில் எனக்குஅநுபவம் அதிகமுண்டு. நான் படிக்கும்படி வற்புறுத்தி என்னிடம் சில புஸ்தகங்களைத் தர வந்தவர்களைக் கண்டிருக்கிறேன். அப்புஸ்தகங்க ளைப் படிக்க எனக்கு நேரமில்லை யென்று வணங்கிச்சொல்லி அவற்றை அப்பொழுதே எடுத்துக்கொண்டு போய்விடும்படி நான் வேண்டிக் கொள்வதுண்டு. பிறகு அதற்கு அடு த்த நிமிஷமே—"படிக்க ஏதாவது புஸ்தகம் தாருங்கள்"—என்று அவர் கள் கேட்கத் தொடங்கி விடுவார்கள். கடைசியில் வெகு பிரியமாய்ப் பேச நெருங்கியதெல்லாம் ஏதாவது பிடுங் கும் சங்கதியாகவே முடிகிறது. இவ ரும் இரவல் பெறவே அந்த வசீகா நிருபம் வரைந்தார்போலும்! வேறு நட்புச்சார்பு எதுங் காணவில்லை.

ஃ

ஒரு தினம் ஒரு பத்திரிகையைச் சிலாகித்துச் சொன்னேன். அதற்கு அவர் "அது பயனற்ற பத்திரிகை, அதில் ஒன்றும் இல்லை, தங்கள் பத் திரிகையைப்போல் சிலாக்கியமான தல்ல" என்ருர். அதற்கு நான்,

---

தம்பியின் நிலத்தில் அண்ணன் வீடு கட்டும் மடமையில், கடைசியில் அந்த வீடு தம்பிக்கே எவ்விதமும் சொந்தமாகி, அண்ணனின் மனைவி மக்கள் வேறு தெருவில் வாடகைவீட்டுக்கு வயிறெரிந்துப் போகும்படி நேர்கிறது.

"வேறொருவரானால் தங்களின் சிலா கிப்பில் மயங்கிவிடுவார்கள். நான் அத்தகையோனில்லை. என் முன் மற்ற தை இகழ்பவர்களைப்பற்றிக் கூர்மை யாகக் கவனிப்பவன். தாங்கள் பய னற்றதென்ற பத்திரிகையில் ஒரு பிரதி சுவைகெட்டிருக்கலாம்; அதற்கு அடுத்த பிரதியைப் பார்த்தீர்களா ? எவ்வளவோ நல்ல விஷயங்கள் அதில் இருக்கின்றன. நான் எழுதும் பத் திரிகையைச் சிலாகித்துவிட்டதினு லேயே தங்களை மேன்மையாக நான் பாராட்டிவிட முடியாது" என்றேன். அவர் திகைத்து மௌனமானார்.

ஃ

இன்னும் அடிக்கடி வருகிறார். தடவைதோறும் இரவல் புஸ்தகம் தரும்படி கேட்டுக்கொண்டிருக்கிறார். இன்னும் நான் எதுவும் இரவல்தந்து ஏமாறவில்லை. வருகிறார். ஒரு மணி போல் பேசுகிறார். என் வேலைகள் கெடுவதையும் எண்ணாமல் பொறுமை யுடனும் இருந்து பேசி அவரை அனுப்பிவைக்கிறேன். இந்த மாதிரி நால்வர் எனக்குக் கிடைத்தால் நான் எழுதக்கூட நேரமில்லாமல் என் உதவி ஆசிரியரின் வேலையை விட்டு விட்டு வீட்டிற்குப் போகவேண்டியது தான். இவரை எந்த வகுப்பில் சேர்ப்பதென்பதைத் தெரிவிக்க வேண்டுகிறேன்.

A. சோமசுந்தரம்.

[சிலர் அன்பு வைத்து அதற்காக வருவதா யிருக்கலாம். அந்த வகை யில் அதிக உரிமை பாராட்டி வாசிப்ப தற்குப் புஸ்தகங்கள் கேட்பதாயிருக்க லாம். எதையும் நீளவிட்டுக்கொடுத் துத்தான் தீர்மானிக்கவேண்டும். முத லிலேயே கத்தரிப்பது ஒழுங்கன்று. ஆனால், வருபவர்கள் தங்களால்பிறரது வேலைகள் கெடாவாறு விரைவில் விடை கொள்வதும் உத்தமமா யிருக் கும். மனோ வுழைப்பாளிகள் ஏகாந்த மாக இருந்தாலன்றி அவர்கள் ஒரு போதும் வேலைசெய்ய இயலாதென்ப தையும் கவனிக்கவேண்டும். ப-ர்.]

## கிட்டுமோ கைலைவாழ்வு—பரமபதம் ?

பாதாதி கேசம்வரை புமானொருவன் பஸ்மாலங்காரம் செய்யப் பெற்றதாலென் ? உடம்பெல்லாங் கண்மணி யணி யப் பெற்றதாலென் ! ஆண்டாண்டு தோறும் காவி வஸ்தி ரங்களையே யுடுத்திக் காட்டியதாலென் ! யாண்டும் ஜபமாலை யேந்திய கையராய் ஏகாக்ஷர—பஞ்சாக்ஷர—ஷடாக்ஷராதி மந்திரானுசந்தானம் செய்யப் பெற்றதாலுமென் ? உள்ள படியே உள்ளன்பிலாத மூர்க்கர்க்கோ கிட்டும் கைலை வாழ்வு —பரமபதம்—முக்திப் பேரும்பேறு ? குங்குமஞ் சுமந்த விலங் கறியுங்கொல்லோ குங்கும வாசனையை ?

தானும் தன் மகளும் கோணலான வாழ்வில் நிற்க, இன்னொரு குல ஸ்திரீயைக் கேவலமாய் ஏசுகிறான். தன் பவிசி தனக்குத் தெரிவதில்லை.




## Letter XXII.

## 22-ம் கடிதம்.

*From a young man just out of his apprenticeship, to his Sweetheart, a servant in the Neighbourhood.*

*Dear Sally,*

I have been long in love with you, but was afraid to tell you. When I get with you to Barnigge, or Sadler's Wells, I am almost like a fool, and altogether unfit for company. I think of you all day, and at night I dream of my dear Sally. I am well settled in work, and my wages are eighteen shillings every week. You and I can live on that, and I shall bring it home untouched on Saturday evening. I will not go to any ale house, but as soon as my work is done, return home to my dear beloved Sally. I hope, my dear, you will not be angry, for I am really in love. I cannot be happy unless you are mine.

தொழில் கற்றுப் பறப்பட்ட வாலிபன் சமீபத்தில் ஓர் ஊழியக் காரியாயிருந்த தன் ஆசைக் கண்ணாட்டிக்கு எழுதியது.

அன்புள்ள சாலி,

நெடுநாளாக உன் மேல் நான் காதல் கொண்டிருந்தாலும் உனக்கு அதைச் சொல்ல அஞ்சினேன். நான் உன்னுடனே பாருநீச் என்கிற இடத் துக்குப்போகும்போது பித்தனைப்போலாகி ஒருவரோடும் சேரத்தகாதவனாயிருந்தேன். பகல் முழுதும் உன் நினைவு கொண்டு இரவில் உன்மேற் கனவும் காண்கிறேன். எனக்கு நல்ல வேலையும் வாரந்தோறும் பதினெட்டு ஷில்லிங்கு சம்பளமும் இருக்கின்றன. நீயும் நானும் அதைக்கொண்டு ஜீவனம் பண்ணலாம். நான் அதைத் தொடாமல் சனிவாரந்தோறும் சாயங்காலம் வீட்டுக்குக் கொண்டுவருகிறேன். அன்றியும் மதுச்கடைக்குப் போகாமல் என் வேலை முடிந்தவுடனே வீட்டில் அன்புள்ளவளாகிய உன்னிடத்தில் வந்து சேருவேன். என் பிரியமுள்ளவளே! உள்ளபடி நான் உன்மேல் ஆசைகொண்டிருப்பதால் நீ கோபித்துக்கொள்ளாயென நம்பியிருக்கிறேன். நீ எனக்குச் சொந்தமாகினாலொழிய நான் சுகித்து வாழேன். இதை உன்னுடன்

"பாலனான பருவம்போம், பன்னுகுமாரப் பருவம்போம், கோலமான தருணம்போம், கோலையூன்றிக் குனிந்தெழுந்து, காலன் மாய்க்க வனைவர்களுங் கல்லென்றழுது, பேர்மாற்றி, ஏலப் பிணமென்றொரு பெயரிட் டிடுகாட் டிடுத லொருதலையே.

I was afraid to mention this to you, but if you will have an answer at my lodgings, I will meet you next Sunday, after dinner, at Shepherd and Shepherdess, when we will take a walk to Hornesy house, and drink tea. How happy shall I be to hear from my charmer: but a thousand times more to think she will be mine.

I am, my dear,
Your real lover,

*Jack.*

சொல்ல எனக்குப் பயமாயிருந்தது. இதற்கு நீ உத்தரம் எழுதி நான் குடியிருக்கும் வீட்டில் கொடுத்து வைத்தால், வருகிற ஆதிவார மத்தியான போஜனத்துக்குப் பின்பு இடைய னிடைச்சி என்கிற இடத்தில் வந்து நான் உன்னைக் கண்டு இருவரும் ஹாரன்ஸி—யவுஸுக்கு உலாத்தப்போய் தேத்தண்ணீர் குடிப்போம். உன் உத்தரவு அறிதல் எனக்கு எத்தனைப் பாக்கியமா யிருக்கும். அன்றியும் நீ எனக்குச் சொந்தமாவாயென்று நினைப்பது பின்னும் ஆயிரம் பங்கு அதிக பாக்கியமா யிருக்கும். இப்படிக்கு

எனது அன்புள்ளவளே,
உள்ளபடி உன்மீது காதல்
வைத்திருப்பவனாகிய

ஜாக்.

## மனோ சக்தி.

எப்போதும் ஒரு விஷயத்தை மனம் சிந்தித்துக் கொண்டே யிருக்கும். தனக்கு இஷ்டமான பொருளென்று தெரிந்துவிட்டால் அதை ஒருபோதும் மறவாது. அதை அடைவதற்கு எவ்விதத்திலும் பிரயாசைப்படுகிறது. கிட்டும் பொருளாயிருந்தாலும், தனக்கு சித்திக்காத வஸ்துவா யிருந்தாலும் அது பிடித்த பிடியை விடாமல் யோசனை செய்துகொண்டே யிருக்கும். தெளிந்த புத்தியுள்ளவர்கள் மனம் கோரின வஸ்து நல்லதா, கெடுதலா என்று யோசித்துக் காரியம் செய்வர். மூடர்கள் முட்டிக்கொள்வர். ஆசைப்படுவது மனம். அவ்வாசையைப் பரிசீலனை செய்து முடிவுரைப்பது புத்தி. புத்தியால் ஆலோசனைசெய்து உத்தம வழியில் மனதைச் செலுத்தினால் எல்லா காரியங்களும் விரைவில் கைகூடும். அடையமுடியாத உத்தம ஞானத்தையும் கண்டறியலாம். மனிதர்களிடம் ஸகல ஸாமர்த்தியங்களுமிருக்கின்றன. அவற்றை உபயோகிக்க வழி தெரியாமல் அலைந்து, கீழ்த்தரத்திலேயே நின்றுவிடுகிறார்கள்.




# கமலாவதி



(465-ம் பக்கத் தொடர்ச்சி.)



அப்போது பத்ஜங்கைக் கொல்வது எளிதாகும். ஆயினும் இராம்சிங்கு அவன் எழுந்து தன்னை எதிர்க்குமளவும் சும்மா விருக்க, அங்குள்ள போர் வீரரிற் சிலர் இராம்சிங்கின் உயர் குணத்தைப் புகழ்ந்தாரேனும், பலர் அறிவீனன் என்று இகழத்தொடங்கினர். சண்டைமுனையில் முறை பார்ப்பது தர்மமோ என்றனர்.

***

பத்ஜங்கு இராம்சிங்கின் மேற் பாய்ந்து தன்கை சோருமட்டும் கத்தியால் வெட்டினான். ஓயாமல் ஒன்றின் மீதொன்றாக வெட்டுக்கள் விழவே இராம்சிங்கால் தாங்கக்கூடவில்லை. முத்து முத்தாக வியர்வை கிளம்பி அவன் முழு உடம்பையும் நனைத்தோடிற்று. மூச்சுவிடவும், நிலையில் நிற்கவும் முடியவில்லை. இனிச் சீக்கிரத்தில் சண்டையை முடிவுசெய்யவேண்டுமென்றெண்ணி கொஞ்சநேரம் சும்மா விருந்து பின்னர் தருணம் பார்த்து பத்ஜங்கின்மேற் பாய்ந்து தன் பல முழுமையும் கொண்டு கேடகத்தால் தாக்கினான். அது திடீரென்றும் பலமாயும் விழுந்தமையால் உடனே பத்ஜங்கு அதைத் தடுக்கக் கூடவில்லை. கேடகத்திலிருந்த இருப்புச் சலாகை அவன் தொண்டையிற் பொத்து இரத்தம் சொரிய ஆரம்பித்தது. அவன் நிற்க முடியாமல் தத்தளித்தான். ஆயினும் அவன் கையிலிருந்த கத்தியால் ஓங்கி எதிரியின் தலையில் தாக்கினான். அவ்வெட்டால் இராம்சிங்கு கீழ் சாய்ந்து மூர்ச்சையானான். சண்டையும் முடிந்தது.

## V

பத்ஜங்குக்குத் தொண்டையிலுண்டான காயம் சொற்பகாயமன்று. அது அகன்றாழ்ந்து எலும்பு தோன்றியது. இரத்த வெள்ளம் எங்கும் புரண்

---

அரும்பே மலருக்கும், மலரே காய்க்கும், காயேகனிக்குங் காரணமாகியது போலவே, சரியையே கிரியைக்கும், கிரியையே யோகத்திற்கும், யோகமே ஞானத்திற்கும் காரணமாகக் கொள்ளக் கிடந்தமை காண்க.

டது. சற்றுப் பொறுத்து அவனும் களை மேலிட்டுத் தரையில் விழலானன். இராம்சிங்கு இன்னும் சிறிது ஊரங்கொண்டு குத்தி யிருப்பானாயின் பத்ஜங்கு பிழைப்பதருமை.

சிறையில் உண்ணாவிரதி யொருவரின் அநுபவமாவது:—முதல் தினத்தில் தேகநிலைமை கேவலமாக இருக்கிறது. 2-வது தினம் நிலைமை மிக்க கடுமையானதாக இருக்கிறது. 3-வது தினத்தில் நிலைமை இன்னும் அதிக கேவலமடைகிறது. 4-வது தினத்தில் மிக்க சௌகரியமாக இருப்பதாகவும் ஒரு உணர்ச்சி ஏற்படுகிறது. பிறகு வழக்கமாய் விடுவதால் கஷ்டமில்லாமல் ஒருவர் உண்ணாவிரத மிருந்துவர முடியும்.

பத்ஜங்கு தோல்வியுற்று அவனும் அவன் படைகளும் ஊரைவிட்டுச் சென்றார்கள்.

இராம்சிங்கு களைதெளிந்து எழுந்திருந்தான். அவனுக்கு சிறிதேனும் சேதம் இல்லை. அங்குள்ள ஆடவரேயன்றி அரிவையரும் அவனது வீரச்செய்கையை வியந்தார்கள். கடவுளை வாழ்த்தினார்கள். கமலாவதி அவனை மணஞ்செய்து கொள்வதாய்த் தந்தையிடம் சாற்ற, அவள் இஷ்டப்படி அவ்விருவர்க்கும் கல்யாணம் நடந்தது.

சண்டை யாரம்பித்தது முதல் தனக்கும் தன் தோழிகளுக்கும் காவல் புரிந்தவனும், பிறகு பத்ஜங்குடன் நெடுநேரம் போர் செய்து தன் மானத்தைக் காத்தவனும் அவன் அன்றோ?

(முற்றிற்று.)

ப. சி. கோவிந்தசாமி ராஜா.

## கிடைத்த சந்தர்ப்பத்தை இழக்காமை.

ஒரே நாட் கல்யாணத்திற்கு உண்மையாகவும் மனப்பூர்வமாயும் இருதரத்தினரும் ஒத்துழைக்க வேண்டியதே. இதை விட்டுப் பழய வழக்கமான மூன்றுநாள் விவாகத்திற்கு யோசிப்பதில் இறங்குவார்களானால், அவர்கள் ஜீவனார்த்த கஷ்டத்தை உணராத அறியாமையுடன் தவறிழைத்தவர்களாகவும் ஆவார்கள். தாங்கள் நடத்திக் காட்டுவதற்குக் கிடைத்த ஒரு சந்தர்ப்பத்தை அன்னோர் தவறவிடுவதுடன், இந்த சிக்கனத்தின் லாபத்தை ஒருபோதும் அவர்கள் திரும்பப் பெறமுடியாமலும் போய்விடும். செலவிட்டது மறுபடி கைக்கு வருவது ஏது? கடன் சுமையும் தப்பாது. பிறகு விழிப்பது யார்? இவரா? விருந்தினரா?

# பிரபஞ்ச தரிசனம்

## அக்பர் சமஸ்தானத்தின் உன்னதம்.

## V



அக்பர் சக்ரவர்த்தியின் காலத்தில் பாரசீக தேசத்திற் பிறந்த பெயர் பெற்ற சாஸ்திரியார் ஒருவர் இருந்தார். அவரை ஒருநாள் அழைப்பித்து இஸ்லாம் ஸமயத்தில் உள்ள பற்பல பிரிவுகளில் எது உத்தமமானது என்று வினவினார். "ஓர் அரசர் சிம்மாசனத்தி லுட்கார்ந்து கொண்டிருக்கிறார் என்று வைத்துக் கொள்வோம். அவ்வரசரிடத்துக்குப் போவதற்கு பல வழிகள் உண்டு. எந்த வழியால் போனாலும் அரசரைப் பார்க்கலாம். நாம் அரசரைக் காண வேண்டியதே தவிர, வழியிலிருப்பவரிடத்தில் நமக்கு வேலையில்லை" யென்று சாஸ்திரியார் பிரதி உத்தரம் சொன்னார். அதாவது, எந்த மதத்தான் வாசல் காத்திருந்த போதிலும், எந்த வழியே போனாலும் கடவுளுடைய ஸந்நிதானத்துக்குக் கொண்டு போய்விடும் என்பது கருத்து.

***

அக்பர் பாதுஷா காலத்தில் இஸ்லாம் ஸமயம் அதிகமாகப் பரவவில்லை. காசி நகரத்தில் அந்தப்பேச்சே கிடையாது. அவருடைய குடிகளில் மிகுதியானவர் ஹிந்துக்கள். இஸ்லாம் ஸமயமென்னும் பிரசண்ட மாருதத்தின் முன் ஹிந்து ஸமயமென்னும் புல்லானது வளைந்து தரையில் படுத்த போதிலும், காற்று ஓய்ந்த பிற்பாடு மறுபடியும் புல் தலை யெடுக்கும். ஹிந்துக்கள் தங்களுடைய சமயத்தைப் பரவச்செய்ய விருப்பங் கொண்டவர்களல்ல. புறச் சமயங்களை விரோதிக்கிறதுமில்லை.

***

பேபர் அரசருக்குமுன் அரசாண்டவர்கள் ஹிந்து மதத்தை ஓங்கிவிடவில்லை. அவர்கள் நாளில் இஸ்லாம் ஸமயத்தை எத்திக்கிலும் பரவச்செய்தார்கள். அக்பர் பாதுஷாவின் காலத்திலோ வெனில், ஹிந்து ஸமயத்திற்கு யாதொரு குறைவுமில்லை. இஸ்லாம் மதத்தைப் போலவே அதுவும் விருத்தியாயிற்று. கோவில்களுக்குப் போடப்பட்ட வரி அவரால் நீக்கிவிடப் பட்டது. புண்ணிய யாத்திரை செய்கிறவர்களுக்கு உண்டான இடுக்கணும் நீங்கிப் போயிற்று. இதனால் குருக்கள்மாருக்கும் குடிகளுக்கும் சௌக்கியமும் ஸந்தோஷமும் உண்டாயிற்று. ஹிந்துஸமயமும் யாதொரு தடையுமின்றி எங்கும் பரவி வளர்ந்தோங்கிற்று.

***

---

மனைவி திருகாணியைப் போக்கடித்தால், கணவன் அந்த நகையையே போக்கடித்து விடுகிறான். ஒருவரைவிட ஒருவர் அதிக சாமர்த்திய சாலிகள்

இவ்விதமான ஏற்பாடுக ளெல்லாம் அக்பர் பாதுஷாவினுடைய ஸமஸ்தானத்திலிருந்த முஸ்லிம் பிரபுக்களுக்குச் சம்மதமில்லே. அக்பருடைய குமாரராகிய ஜீஹாங்கியர் என்பவர் ஹிந்துக்களுடைய கோவில்களே இடித்து அவர்களே இஸ்லாம் ஸமயத்தில் சேரும்படி நிர்ப்பந்தப் படுத்த வேண்டுமென்று விருப்பங் கொண்டார். அதைக் கண்டு அடியில் வரைந்திருக்கிற கடிதத்தைப் பிதாவானவர் எழுதி யனுப்பினர்.

ஃ

"என் பிரியமான குழந்தையே!

நான் ஏகசக்ராதிபதியா யிருக்கிறேன். பூமியில் நான் கடவுளுடைய சாயலாகத் தோன்றுகிறேன். அவரால் படைக்கப்பட்ட ஜனங்களுக்கெல்லாம் யாதொரு பேதமின்றி அவர் அருள் புரிகிருர். என்னுடைய விசாரணேயில் அடங்கிய ஜனங்கள் மீது தயையில்லாமல் அவர்களே நிர்ப்பந்தப் படுத்துவேனுனல், நான் இருக்கிற உயர்ந்த பதவிக்குத் தக்கபடி நடந்தவனுக மாட்டேன். கடவுளால் படைக்கப்பட்ட எல்லா ஜனங்களிடத்திலும் நான் ஸமாதானமாக வாழ்கிறேன். அப்படியிருக்க, நான் ஏன் அவர்களுடைய பிரியத்தைக் கெடுத்துக்கொள்ள வேண்டும்? என்னுடைய குடிகளில் ஆறில் ஐந்து பாகம் ஹிந்துக்களல்லவா? நீ தெரிவித்த மாதிரியாக நான் நடப்பதாயிருந்தால் அவர்க ளெல்லாரையும் கொலே செய்ய வேண்டுமல்லவா? ஆகையால் அவரவர்கள் இஷ்டப்படி நடந்து கொள்ளும்படி உத்தரவு செய்திருக்கிறேன். அதுவுமன்றி, அந்த ஜனங்களெல்லாம் ஆக்கிரா நகரத்திலுள்ளவர்களேப் போல் சாஸ்திர விசாரணே செய்தும், கலேகளேக் கற்றும் குடிகளுக்கு சௌக்கியத்தை உண்டாக்குகிருர்கள். அவர்களில் அநேகம்பேர் ராஜாங்கத்தில் உயர்ந்த பதவியடைந்திருக்கிருர்கள். இந்த நகரத்தில் எத்தேசத்து மனுஷரையும், எந்த சமயத்தை அனுசரிப்பவர்களேயும் காணலாம்."

ஃ

ஆக்கிராவிலும் லாகூரிலும் ஒரு வகுப்பான கிறிஸ்தவர்கள் கோயில்கள் கட்டிக் கொள்ளும்படி உத்தரவு கொடுத்தார். பாடசாலேகள் ஏற்படுத்தும்படிக்கு இடம் கொடுத்ததன்றி, அவற்றிற்கு வரும்படிக்கும் ஏற்பாடு செய்தார். குடிகள் அவரவருக்கு இஷ்டமான ஸமயத்தை அனுஸரிக்கலாமென்று உத்தரவு செய்ததன்றி, ஹிந்துக்களும் மகம்மதியரும் கிறிஸ்தவர்களும் செய்யும் ஸமயவாதங்களே ஸந்தோஷமாகக் கேட்பார். மேற் சொன்ன ஸமயத்தார்கள் அவர் முன்னிலேயில் வந்து வாதம்செய்வது வழக்கம். ஒவ்வொரு ஸமயத்தாரும் புறச் சமயத்தாரை இகழ்ந்து தம்மைப் புகழ்ந்து கொள்வதைப் பார்த்து நகைப்பார்.

ஃ

ஒரு சமயத்தில் கோலா பட்டணத்திலிருந்து மூன்று கிறிஸ்தவர்கள் இஸ்லாமியரோடு ஸமய வாதம் செய்யவேண்டு மென்ற கருத்தோடு வந்தார்கள். பாதுஷாவானவர் ஸந்தோஷமடைந்து இஸ்லாமிய குருக்கள்மார்களேயும் கிறிஸ்தவர்களேயும் வாதிக்கும்படி சேர்த்து விட்டு விட்டார். இஸ்லாமியர் ஒருவர் தமது

---

ஜனஸமூகம் ஒரு கட்டுக்கும் பந்தத்துக்கும் அடங்கி வாழ்ந்து வருகிறது. இதனின்றும் மீறுகிறவர்களின்பாடு அப்போதுமட்டும் பரமசுகமாய்த்தோன்றி பிறகு அவர்களின் மக்களின் காலத்தில் திண்டாட்டமும் தவிப்புமாகிறது.

வேதத்தில் நம்பிக்கைவைத்து எரிந்து கொண்டிருக்கின்ற நெருப்பின்மேல் நடக்கிறதாகச் சொன்னார். கிறிஸ்தவர்களுக்கு அவ்விதமான நம்பிக்கை அவர்களுடைய வேதத்தில் இருக்குமானால் அவர்களுள் ஒருவர் அவ்வாறே செய்யவேண்டுமென்று அவர்களுக்கு பாதுஷா சொன்னார். கிறிஸ்தவர்கள் இதைக்கேட்டு முதலில் திடுக்கிட்டுத் தங்களால் முடியாதென்று உறுதியாய்ச் சொல்லி விட்டார்கள். இது கண்டு இஸ்லாமியர் கிறிஸ்தவர்களை இகழத் தலைப்பட்டார்கள். பின்பு தைரியமடைந்து தாமும் இஸ்லாமியரும் நெருப்பின்மேல் குதித்தோடுவதற்குப் பதிலாக, மெள்ள இவ்விருவரும் கை கோத்து நடந்து போகிறதாயிருந்தால் தங்களுக்கும் ஸம்மதந்தானென்று கிறிஸ்தவர்கள் சொன்னார்கள். இவ்வாறு சொல்லவே இஸ்லாமியருக்கு முன்னிருந்த தைரியம் பறந்து போய்விட்டது. நெருப்பில் இறங்குவதற்கு ஒருவரும் துணியவில்லை. கிறிஸ்தவர்களை அடக்க வேறொன்றும் தெரியாதவர்களாகி வாயில் வந்தபடி வைதார்கள். அது நியாயமல்லவென்று பாதுஷா உத்தரவு செய்தார்.

ஹிந்துக்கள் அவர்களுடைய விருப்பப்படி கடவுளை வணங்கலாமென்று உத்தரவு செய்திருந்தபோதிலும் அவர்களுடைய சில ஆசாரங்களைப் பாதுஷா விரும்பவில்லை. மன ஒப்பமில்லாமல் உடன் கட்டையேறக் கூடாதென்று கண்டிப்பாக உத்தரவு செய்தார். ஒருநாள் ஹிந்து அரசர் ஒருவர் தமது மருமகளை உடன் கட்டை யேறும்படி பலவந்தம் செய்யப்போவதாகக் கேட்டு அதைத் தடுக்கும்படி நெடுந்தூரம் போனார்.

(மற்றவை மற்றதில்.)

## முன் செய்ததற்குப் பதில் !

1. கண்ணீர் சிந்துவதும் கதறுவதும் ஏனோ பெண்ணே ? கண்ணீர் விடவே நீ மற்றவரைப் புண்ணாக்கிய பலன் இதுவே !

2. கொண்டகணவனை எதிர்த்தே மதியாத சங்கதியும், அண்டைவீட்டு நாரிச் சண்டையிலே அடுக்காக வந்திடுமே !

3. மற்றவர் நொந்து அடங்க மீறியே தான் பேசியதற்கு, மற்றவர் தன்னை யேசி யடக்குங்காலமும் குறுகிடுமே !

4. குதிக்கும் குதிப்பு இப்போதானால், இத்தனைக்குமே ஈசன் மிதிக்கும் மிதிப்பு பின்னால் இருக்கிறதுவே !

பொதுநன்மைக்கு உழைக்க வந்தோர் தம்மைப்பற்றிப் பிறர் கூறும் தூஷணை—பூஷணை இரண்டையும் குப்பைத் தொட்டியில் எறிந்துவிட்டு, தமது மனஸாக்ஷிக்கு விரோதமில்லாமற் காரியங்களைச் செய்து அவ்வளவுடன் திருப்தி கொள்வார்கள். அன்னோருக்கு பூச்சாண்டி காட்டிப் பயனில்லை. எத்தனையோ பூச்சாண்டிகளை அன்னோர் கண்டு ஏப்பம் விட்டுத் தேறியவராவார்.




(முன்பக்கம் 428-லிருந்து.)

483. All that inhabit this great earth, Whatever be their rank or worth, Are kindred and allied by birth, and made of the same clay. LONGFELLOW.

அந்தஸ்தும், யோக்கியதையும் எப்படி இருந்தபோதிலும், இந்த பெரிய நில உலகத்திலே குடியிருப்பவ ரெல்லோரும் உறவினரே; பிறப்பால் சம்பந்தப்பட்டவர்களே; ஒரே அச்சில் செய்யப்பட்டவர்களே.

லாங்பெலோ.

484. To the noble mind Rich gifts wax poor, when givers prove unkind.

SHAKESPEARE.

கொடுப்பவர்கள் அன்பில்லாதவர்களாகத் தோன்றுங் காலத்து, மேன்மைக்குணம் படைத்தவர்களுக்கு பெரும் பரிசுகளெல்லாம் அற்பமாகும்.

ஷேக்ஸ்பியர்.

485. It is too common with all of us, but it is especially in the nature of a mean mind, to be overawed by fine clothes and fine furniture. DICKENS.

சிறந்த உடைகளையும், தட்டுமுட்டு சாமான்களையும் கண்டு பயப்படுவது நம் எல்லோருக்கும் சர்வ சாதாரணமாக இருப்பதோடு, அற்பரின் இயற்கைக்கு முக்கியமாக உள்ளது.

டிக்கன்ஸ்.

486. Better a little childing than a great deal of heartbreak.

SHAKESPEARE.

இருதயம் மிகவும் நோகும்படி செய்வதைவிட, சிறிது கடிவது நலம்.

ஷேக்ஸ்பியர்.

487. Trifles make up the happiness or the misery of mortal life. ALEXANDER SMITH.

தொல்லையான வாழ்க்கையின் சந்தோஷத்தையோ, அல்லது துன்பத்தையோ விருத்தி செய்வது அற்பங்களே.

அலெக்ஸாண்டர் ஸ்மித்.

488. A soul without reflection like a pile without inhabitant, to ruin runs. YOUNG.

அன்புடன் திரும்பி நேசிக்க ஒரு பிரதிபிம்பம் உயிருக்கு இல்லையாயின் குடியில்லா பெரும் வீட்டிற்கு சமமாக அழிந்திடும். யெங்.

489. I never did repent for doing good, Nor shall not now. SHAKESPEARE.

நல்லது செய்ததற்கு நான் விசனப்பட்டது கிடையாது; இப்பொழுது அதற்காக விசனப் படுவதுமில்லை.

ஷேக்ஸ்பியர்.

490. The world belongs to those who come the last; They

---

மறைப்பதைத் தான் எவரும் சிரத்தையுடன்விசாரித்து ஆராய்ந்து கண்டு கொள்கிறார்கள், மறைக்கும் ரகசிய உயில்தான் வெளியில் வந்து விடுகிறது!

will find hope and strength as we have done. LONGFELLOW.

கடைசியாக வருபவர்களுக்கே உலகம் சொந்தமாகிறது. நம்மைப் போலவே அவர்களும் நம்பிக்கையையும், பலத்தையும் காணுவார்கள்.

லாங்பெலோ.

கையில் காசு இருக்கிறவரையில், செலவிடுகிறவரையில் வீட்டுக்கு எல்லோரும் வெகு உறவுதான், வரவுதான். விழித்துக்கொள். பிறர் சூட்சியில் ஏமாருதே. மின்னுவதெல்லாம் பொன்னல்ல. பிரியமாய் இப்போது பேசுவோர்கள்தான் பிறகு பிரியும் விரோதிகள். எதையும் யோசித்துப் பிறகு சொல்வதாகக் கூறிக் கடைசிவரையும் தப்பித்துக்கொள். அகப்பட்டுக் கொள்ளாத வரையில் க்ஷேமம். உன்னைக் கேவலப்படுத்துகிறவனை நீ கண்டித்துவிடு.

491. Thou wilt not leave us in the dust: Thou madest man, he knows not why, He thinks he was not made to die: And thou hast made him: Thou art just. TENNYSON.

பரம்பொருளே! தாங்கள் எங்களை மண்ணோடு மண்ணாக விட்டுவிடாதீர்கள். நீ மனிதனைப் படைத்தாய். எதற்காகப் படைத்தாயென்று அவன் தெரிந்துகொள்ளவில்லை. இறப்பதற்காக அவனைப் பிறப்பிக்கவில்லை யென்று அவன் நினைக்கிறான். நீ அவனை சிருஷ்டித்துவிட்டாய். உன்வேலையில் நீ சரியானவனே. டென்னிஸன்.

492. Hours splendid as the past may still be thine, and bless thy future as thy former day. BYRON.

கடந்துபோன நாட்கள் இன்னமும் உன்னதாயிருப்பதாலே, மணிகள் சிறப்பாகின்றன. முன்னைய நாட்களைப்போல பின்னைய நாட்களையும் வாழ்வுறச் செய்வாய். பைரன்.

P. G. குலசேகரன்.

---

பக்கத்திலேயே தனக்கு வேண்டிய சாமான் கிடக்க, அதைத் தேடிக்கொண்டு வீடு முற்றிலும் ஆராய்ந்து அலுத்துவிட்டு உட்காருகையில், அருகிலுள்ள அந்த சாமான் அவனுக்கெதிர்ப்பட தன் மதியீனத்திற்குவருந்துகிறான்.

---

கணவனின் மனப்படி நடவாத மனைவிக்கு அதிக நகைகள் ஏற்படாது. வட்டி நஷ்டத்தை யோசிப்பவனும், நூறை நூற்றைம்பதாகப் பெருக்க நினைப்பவனும் நகைகள் அதிகமாக ஒருபோதும் செய்யான்.

---

நேற்றுவரை காலியாக நாலைந்து பேரே இருந்த வீட்டில் இன்றோ விவாகத்துக்காக வீடு முழுதும் ஜனங்கள் நிறைந்து, படுப்பதற்குப் பல வீடுகளின் திண்ணைகளைத் தேடிச் செல்லுகிறார்கள். இவ்வளவு வைபவமான புண்ய விவாகம் கடைசியில் கலகமும் சச்சரவுமாவது என்ன பாவம்!




**1. அநுபவத்தின் எல்லை:**—எவன் உலக வாழ்க்கையில் பலமுறையும் பட்டுழன்று கண்ணீர் பெருகி நீண்ட அநுபவங்கண்டு இனி நாம் தவறோ மெனவும், தான் அதிக அநு போகஸ்த னெனவும் எண்ணு கின்றானோ, அத்தகையோன் தான் பின்னர் அதிக சிக்கலான வியவகாரத் துள் அகப்பட்டுக்கொண்டு இன்னும் புது விதமான அனுபவங்கள் பெற்று, ஏ! அநுபவமே உனக்கு எல்லை யில்லை யாயென ஏங்குகிறான்!

**2. மீண்டும் மோசம் போதல்:**—அவனை நம்பி அடைந்த ஹிம்சை—ஏமாற்றம்—மோசம் இவைகளுக்குக் கணக்கில்லை. இனி அவன் சகவாசமே கூடாதென்று ஒதுங்கியதும் எத்தனையோ தடவை. அதன் பிறகுங்கூட அவனையே நம்பி மோசம் போவதுதான் ஆச்சரியமான மயக்கு சங்கதி!

**3. தலைப்பாகை சாமிகள்:**—சிலருக்குக் கோட்டும் ஷர்ட்டும் தலைக் குட்டையும் எதிர்படுகிற ஆளை மயக்கி விடும்படி யிருக்கும். ஆனால் அவர்களை நம்பிக்கொடுத்ததோ பின் திரும்பி வருவதில்லை. விற்பனையானது அவர்கள் வயிற்றுக்கே போய்விடும். கடைசியில் விசாரித்தால் அவர்களின் தலைக் குட்டையும் கோட்டும்தான் அவர்களின் ஐவேஜி என்று தெரியவரும்.

**4. பாக்கிப்பணம்:**—ஒருகடையில் தனக்கு இருக்கும் அதிக பாக்கியை உடனே தீர்த்துவிடவே ஒவ்வொரு நாணயஸ்தனுக்கும் ரோஷம் உண்டாகிறது. ஆனால் கடவுள் அதற்கான பண மிச்சத்தையும் வரவையும் உண்டாக்காமலே திகைக்க வைக்கிறார்!

**5. முழப்பட்டை நாமம்:**—பல மாதங்களாய் ஏற்கெனவே கொடுத்த கடன் வசூலாகாமல் அவனிடம் அலைந்து திரிந்து, கடைசியில் அவன் கடைக்குப் போக, அங்கு நடக்கும் கனத்த வியாபாரத்தைக்கண்டு தனது பாக்கி எவ்விதமும் வந்துவிடுமென்று மயங்குகிறான். இவன் மயங்குவதைக் கண்ட கடைக்காரன் பின்னும் நாணயமாய் சாதுரியமாய்ப் பேசப்போக, அதில் ஈடுபட்டு இன்னும் புதுசரக்குகளைப் புதுக்கடனாகக் கொடுத்துவிடுகிறான். அதன் பின்னும் பல மாதங்கள் கஷ்டப்பட்டு அலைந்து, மாத—வார—நாள்-மணிக்கணக்கிலும் கெடுவுசொல்லிவிட, கடைசியில் முழுப்பட்டை நாமம் இவனுக்குக் கிடைக்கிறது! இது சில பெரிய இடங்களின் யோக்கியதை!

**6. பிணத்துக்கும் கேடு கெட்ட நிலை:**—பணமில்லாதவன் பிணம் என்பர். பிணத்திற்காவது நாலுபேர் வந்து அதை நீராட்டி வஸ்திர மணிவித்து நாலுபேர் சுமந்து சுடலைக்குப் போகிறார்கள். இந்த மரியாதை

---

சிருஷ்டியில் ஒரு நிமிஷ நேரமேனும் ஒரு சிறு பரமாணுவும் செயலற்றுக்கிடப்பது கூடாமையாம்! இருந்த இடத்தே ஓர் அல்ப பதார்த்தமும் இருந்தே யொழிவதும் கூடாமையாம்! முக்திஸ்தானமொன்றே சலனமற்றதென்றபடி.

கூடப் பணமற்றவனுக்குக் கிடையாது. பிணத்துக்கும் கேடுகெட்டவனாகிறான்.

7. **வெளியூர் ஒட்டக்காரர்கள்:**—இவர்களுக்கு உள்ளூரில் பிழைப்பு இல்லை. வெளியூரில்தான் கஞ்சி! போனால் திரும்புவது மூன்று நான்கு வருஷங்களுக்குமேல். இத்தகையோருக்குப் பெண்ணைத் தந்து அவள் கணவனை வருடக்கணக்கில் பிரிந்து ஏங்கும்படி செய்வதை விட, அவளைக் கிணற்றில் தள்ளிவிடுவது மேல்.

8. **பிரிந்த பிறகு புத்திவருகிறது:**—ஊரில் மனைவியுடன் இருக்கும்போது அவளை ஸதா வருத்திக் கொடுமைப் படுத்திச் சச்சரவிடுகிறவன், வெளியூரில் வியாபாரத்திற்குப் போய்த் தங்கிவிடும்போது இரவு கால சுகம் அனுபவிக்க இயலாமல் ஒண்டிக் கட்டையாய் உறங்குகையில் மனைவி மீது நினைவும் பிரீதியும் அதிகமாகி அவளை முன்பு வருத்தியது முள் போல் வதைத்து, அவள் முகத்தை என்று காண்போமோ என்று ஏங்குகிறான்.

9. **ஜீவனக் கஷ்டம் பிரிக்கிறது:**—கணவனும் மனைவியும் ஒருவருக்கொருவர் உயிருக்குயிர். ஒரு நிமிஷப்பிரிவு கனத்த வேதனை. கணவனோ வயிற்றுப்பாட்டுக்கு வெளியூரில் பலநாள் தங்க நேருகிறது. மனைவியை அங்கு அழைத்துக் கொள்ளவோ கையில் பணம் போதாத நிலை. புறப்படாவிடினோ வயிற்றுக்கு வழியில்லை. பல்லைக் கடித்துக் கொண்டு மனைவியின் பிரிவைச் சகித்துக் கண்ணீர் பெருக்குகிறான்! வீட்டில் அந்த நங்கையும் அவ்விதமே பிரிவுக்குசோர்ந்து அழுத கண்ணாகிறாள்!

10. **மஞ்சள் பூசுதல்.**—சோப் தினுசுகளும் முகத்தில் பூசும் மாவுகளும் அதிகரித்து விட்டதைக் காண்கையில், நங்கையர் முகத்துக்கிடும்மஞ்சளின் உற்பத்தியே இனி இல்லாது செய்துவிடுவரோ வென்று தோன்றுகிறது. [முகத்துக்கு இல்லாவிடினும் குழம்பு வகைகட்கும், ஔஷதங்கட்கும் மஞ்சள் வேண்டி யிருப்பதால் உற்பத்தி குறையாது! ப—ர்.]

11. **சென்னையிலிருந்து இறக்குமதி:**—நகைகள் அடிக்கடி மாறுவதும் ரவிக்கை—சேலை அணியும் புது மாதிரிகளும், மற்ற தளுக்கான நாகரீக தடபுடல்களும் முதல் முதல் சென்னையிலிருந்து தான் உற்பத்தியாகி மற்ற ஊர்களுச்குப் புறப்படுகின்றன வாம்!

12. **சீமைக் கமலம் மோஸ்தர்:**—வீட்டுக்காரர் சொற்படி நகை வியாபாரி கெம்பு கம்மலை அவர் வீட்டில் கொண்டுபோய்க் காண்பிக்க, வீட்டிலுள்ள பெண்கள் இதுவேண்டாம், இப்போது கம்மல் பாசன் மாறி விட்டது. அதாவது நடுவில் சீமைக் கமலம் போட்டதுதான் இப்போதைய புதுமோஸ்தர் என்றுசொல்லி வியாபாரியைத் திருப்பி அனுப்பி விட்டார்களாம்!

13. **கெம்பு நகையின்உயர்வு:**—பெண்கள் காதில் அணியும் கம்மல் ஸ்ரீரத்தினமாகிய கெம்பு நகையாக அணிவதில் உள்ள சோபிதம்—லாவண்யம்—வசீகரம் — தேஜஸும் வைரநகை யணிவதில் வருவதில்லை. அது என்னவோ வெள்ளை வெளேரென்று மட்டுமே ஒரு பக்கம் மினுக்கிக் கிடக்கிறது என்கிறார் ஒருவர்.

வ. சு. நாராயணசாமி செட்டியார்.

# மூளைக்கு வேலை.

## I

### விடுகதை வினா ?

(1) ஐந்தெழுத்தாகிய ஒரு சொல். முதலெழுத்தையும் கடைசி எழுத்தையும் நோக்கில் நுகர் அல்லது சாப்பிடு என்னும் அர்த்தத்தைக் காட்டும். முதலெழுத்தையும், மூன்றுமெழுத்தையும், நான்காமெழுத்தையும் சேர்க்கில் ஒருவகை சேலையின் பெயரைக் குறிக்கும். ஐந்தெழுத்தையும் நோக்கில் ஒரு திங்களின் பெயராகும்.

(2) நான்கெழுத்தாலாகிய ஒரு சொல். முதலெழுத்தையும் கடைசியெழுத்தையும் நோக்கில் மெய் யென்னும் பொருளைக் குறிக்கும். இரண்டாவதெழுத்து, பசுவின் மற்றோர் பெயராகும்; மூன்றும் எழுத்துடன் நாலாவது சேரில் "தாமதி" என்னும் செயலைக் காட்டும். நான்கெழுத்தும் ஒன்று சேரில் ஒரு பெண்பாலைக் குறிக்கும். மூ. இ. சுப்ரமணியம்.

## II

### விடுகதை வினா ?

(1) எத்தனை ஆடு சேரின் ஒரு எருமையைக் குறிக்கும்?

(2) தரைவாழ் ஜெந்து இரண்டின் பெயரைச் சேர்க்கின் நீர்வாழ் ஜெந்து ஒன்றின் பெயராகும். அவைகளெவை? ஆ. கணபதிப்பிள்ளை.

## III

நடுவெழுத்து வினா ?

அங்கமெலாம் வியர்வையுட னிருக்கும்போது
சங்கையின்றி வேண்டுமொரு பொருளின்பேரும்
கங்கைதனில் வாழுமொரு சீவன்பேரும்
மங்கையர்களணியாத பூவின்பேரும்

சங்குமொரு அடவிதனில் பிராணிபேரும்
எங்குமே நிறைந்ததொரு தானியப்பேரும்
பாங்குடனே ஐந்துவகைபதத்திலுள்ள நடுவமைத்த யெழுத்துக்களைத்
தாங்கிப்பார்க்கில் விளங்கிடுமே (சிவமயம்) யெனக்கூறலாமே.

குறிப்பு:—மேற்காட்டிய பாசுரத்தில் சொல்லியுள்ள ஐந்து பதங்களும் மூன்றெழுத்துள்ளதாக அமைத்து நடுவெழுத்தை வரிசையுடன் நோக்கில் (சிவமயம்) எனத் தோன்றும்.

---

பொழுது போகவில்லை யென்பவர்களின் மத்தியில் ஒரு கைக்குழந்தையை வைத்துவிட்டால் பொழுது போவது கூடத்தெரியாதாம்!

தோன்று தோன்றிய யாவவை தூயன ?
வின்று தோன்றிய யாவவை தீயன ?

**விடுகதை வினு ?**

(1) ஒரு ஊர்—தருமத்தையும், உஷ்ணத்தையும், வழியையும், (2) இன்னொரு ஊர்—வீணையும், அஸ்திரத்தையும், (3) வேறொரு ஊர்—பக்ஷிகளில் ஒன்றையும், பர்வதத்தையும், (4) மற்றொரு ஊர்—பிரதான நூலையும் காட்டையும், (5) இன்னுமோர் ஊர்—கல்லையும் உயர்ந்த உடையையும், (6) வேறோர் ஊர்—வர்ணங்களில் ஒன்றையும், குன்றையும், (7) மற்றோர் ஊர்—குஸ்தியையும், கிஸ்தியையும்—குறிக்குமேயானல், ஊர்களின் நாமதேயங்களென்ன ?

வ. சு. நாராயணசாமி செட்டியார்.

## IV

**கார்த்திகை மாத ஸஞ்சிகையிலுள்ள விடுகதை வினுவுக்கு விடை :—**

**I விடுகதை வினு:**—(1) அபின்—அரம்—நைஜாம்—புனுகு—நாகூர்—நீலம்—வன்னி. இவைகளின் நடு எழுத்து சேரில் "பிரஜானுகூலன்" என்ருகும். (2) ஜலம்—உப்பு. (3) 15-தங்கக் கட்டிகள்.

**II விடுகதை வினு:**—301-படிகள்.

**III விடுகதை வினு:**—(1) 1-வது எழுத்து ஸ்ரீ—செல்வம். 2—4—5 எழுத்துகள் சேரில் **ரகம்**—தினுசு. 4—5 எழுத்து கூடில் **கம்**—மோக்ஷம். 1-முதல் 5-எழுத்து சேரில் **ஸ்ரீரங்கம்.**

(2) 1-வது எழுத்து நா—ருசிபார்க்கும் உறுப்பு. 1-2 எழுத்து சேரில் **நாவி**—கஸ்தூரி (ஒரு வாசனைத் திரவியம்.) 1-4 எழுத்து சேரில் **நான்**—தன்னைக் குறிக்கும். 1-3-4 எழுத்து சேரில் **நாதன்**—கணவன். 1-முதல் 4-வரை சேரில் நாவிதன்—ஓர் இன்றியமையாத தொழிலாளி.

### காமியார்த்தமாய் உபாசிக்கும் தேவதைகள்.

"வீரனிருளன் காட்டேரி வெருளனெடு சாமுண்டி தூற்றித் தூண்டி நல்லண்ணன் தொட்டியச் சின்னுன், பெற்றண்ணான் மாரி முனியன் சங்கிலியும் மாடன் கறுப்பன் பாவாடை மூரிக்காத்தான் குழியரிசி மோகினி சத்த கன்னிகையும், சேரி மன்னுரன் மின்னிடையான் சிறுகாட்டுடையான் பனைமரத்தான், மாரியாண்டி வழிபறித்தான் மலையன் எரியன் சிலம்பாயி, இடையன் நல்லான் ஊமையொடு கூறும் பெத்தாச்சி வீட்டுத் தெய்வ முதலான"—தேவதைகளைக் காமியார்த்தமா யுபாசிக்கும் ஞானசூன்யர் எத்துணை பேர் ? இவைகளுக்குக் கொடுக்கும் பலிகள், பூஜைகள் எத்தனை !

# சென்றமாதம்

"ஏளிதம் பேசி இவ்வேடம் ஆனேன்" என்று எங்கும்படியாக ஒரு சிலருக்கு சென்னை ஹை கோர்ட்டார் அபராதம் விதித்தனர்.

**தூஷித்ததின் பலன்!**

சென்னையில் புஜக்ஷத்திரிய மரபைச் சேர்ந்த ஒரு பெண்மணியை விதவையாயிருந்தும் குழந்தை யீன்றாளென்று கூறி ஜாதிப்பிரஷ்டம் செய்து, அந்த அம்மையின் குமாரன் மரித்ததற்கு எவரும் உதவாது விலகி விட்டதாக வழக்கு. தான் கர்ப்பமாகவே யில்லையென அந்தப் பெண் வாதிக்க, முடிவில் கோர்ட்டார் அப் பெண்ணுக்கு நஷ்ட ஈடு ரூ. 500-ம், அவதூறு செய்தமைக்காக அந்த அம்மைக்கு நஷ்ட ஈடாக ரூ. 2000-மும், அந்த அம்மையின் கோர்ட்டுச் செலவுகளும் அவதூறு செய்தோர் கொடுக்க வேண்டுமென்று தீர்ப்பு கூறினர். ஏழை என்றால் எவருக்கும் எளிது தான், ஆனாலும், ஏழை அழுத கண்ணீர் கூரியவாளுக்கு ஒக்குமன்றோ ? ஆணுக்கு அவகேடு செய்தாலும், பெண்ணுக்குப் பிழை சொல்லலாகாது. (ஏளிதம்—இகழ்ச்சி.)

***

"காமம் செத்த பிணமென்றும் பெற்ற மகளென்றும் பாராது" என்பார்கள். அப்படியாக, வங்காளத்தில் மிதுனபுரி ஜில்லாவில் மதஸ்தாபனத்தின் தலைவரான ஒரு மகந்து பக்குவமுறாத

**ஒரு மஹந்துவின் காமப் பித்து!**

12½-வயதுப் பெண்ணை, அவள் பிச்சை கேட்கவந்தபோது பிடித்து பலாத்காரமாய்க் கற்பழித்து விட்டாராம். அதனால் அப்பெண்ணும் அன்றே இறக்க நேர்ந்ததாம். மகந்துக்கு ஏழு வருஷ கடுஞ்சிறை கிடைத்தது. வெளிக்கோ சாமி, உள்ளுக்கோ காமி. வெளியே பந்து. உள்ளுக்கோ துஷ்திரீகளைக் கெடுக்கும் பாதகன். இத்தகையோர் வீடுகளிலும், மடங்களிலும், கோயில்களிலும் நிறைந்திருப்பதால் இச்சண்டாளர்களிடம் சிக்காது எச்சரிக்கை பெறவேண்டும்.

***

"நடக்கும் கால் தவறுவதிலும் நா (நாக்கு) தவறுதல் கேட்டது" என்பதை நினைத்துப் பார்க்க நேரமில்லாமல், சென்னையில் கூடிய படித்த வகுப்பு மாதர்களின் கூட்டத்தில் "விவாக ரத்து" செய்து கொள்ளும் சுதந்திரம் பெண்களுக்கு வேண்டுமென்று ஒரு முடிவைச் செய்திருக்கிறார்கள். ஸ்திரீகள் இவ்வுலகில் எல்லா சுதந்திரங்களையும் பெற்றாகிவிட்டது போலும்! இந்த விவாக ரத்து சுதந்திரம் ஒன்று தான் இனி பாக்கி போலும்! படித்த ஸ்திரீகள் என்போர் பதினாயிரத்துக் கொருவர் கூட அகப்படுவது கஷ்டம். வைத்தியனாதன் என்பதைப் பைத்திய நாதன் என்று எழுதத் தெரிந்த பெண்களை யெல்லாம் படித்த ஸ்திரீகள் கணக்கில் சேர்த்துப் பேசுதல்

**கணவனைத் தள்ளி "விவாக ரத்து" செய்தல்.**

தவறு. பெண்கள் படும் பாடு படுகிற வர்களுக்குத் தெரியும். அவர்களுக்கு இப்போது கிடைக்கும் அன்ன வஸ்திரம் புருஷன் இறந்தால் தவறிப்போய் பெரிய பரிதாபப் பிழைப்பாகி விடும். கணவனையன்றி ஒரு காசு தருவோர் எவருமில்லை. இப்போது நல்ல நிலைமையிலுள்ள பெண்கள் கணவனுக்குப் பிறகு—அவனோடு வருமானம் போய்விட—வேறு எவ்வித வருமானமுமின்றி மக்களை வைத்துக்கொண்டு எவ்விதம் வாழ்வரோ கடவுள் தான் அறிவார். வீட்டில் கிடைக்கிற திட்டு-அடி — நிர்ப்பந்தம் — சந்தேகங்கள் இவைகளுக்கும் குறைவில்லை. இதுவே 100-க்கு 90-வரையுமுள்ள நிலை. சபைகூடித் தீர்மானங்கள் செய்கிற மாது சிரோமணிகள் சோறு துணிக்கு யதேஷ்டமாகத் தனராசியுள்ள பாக்கியவதிகள். அவர்களுக்கு "விவாகரத்து" தீர்மானமும், இன்னும் பல தீர்மானமும் செய்யத் தோன்றலாம். மற்ற ஸ்திரீகளுக்கோ இன்று அரிசிக்கு வழி கிடைக்குமா—கணவன் கைக்கு இரண்டுகாசு எட்டுமா—கலகமில்லாமல் பொழுது போகுமா—பிடுங்கலில்லாமல் இந்த நாள் முடியுமா—என்பதுதான் பெரிய ஆலோசனையாகும். இதுவே உள்ளேயுள்ள உண்மையான நிலைமை. இவர்களுக்குக் கணவனைவிட்டுப் பிரிய யோசனையே கிடையாது. பெண்கள் கணவனை விட்டுப் பிரியாதிருக்கவே காமம் என்றகுறடாவைக் கடவுள் ஏற்படுத்தியிருக்கிறார். விவாகரத்து என்பவையெல்லாம் வெட்டிப் பேச்சுகளும் வீண் தீர்மானங்களுமே யாகும்.

***

"நில்லாரை நாவிலுரை, பொன்னைக் கல்லிலுரை" என்பார்கள்.

**ஆசாரியராயின் வாக்குகள்.**

அதுபோல், நல்லாருள் ஒருவரான ஆச்சரியா ஸர் பிரபுல்ல சந்திரராய் சென்னையில் செய்த பிரஸங்கத்திலின்றும் இரண்டொரு குறிப்புகள் தருகிறோம். (1) செருப்பு தைப்பவனானாலும் இழிவு என்பது கிடையாது. அதுவும் ஒரு தொழிலாகவே கருதப்படுவது வழக்கம். (2) வங்காளத்தில் பிராமணரல்லாதார் பிராமணருக்குத் தண்ணீர் கொடுத்தால் தோஷம் பாராட்டப் படுவதில்லை. (3) சீனா தேசத்தில் 45-கோடி ஜனங்கள் ஒரே ஜாதி மதத்தினர். அவர்களிடையே தீண்டாமையே கிடையாது. (4) சீனாவிலும் ஜப்பானிலும் மத பேதம் கிடையாது. அங்கு ஒரு குடும்பத்தில் தகப்பன் ஒரு மதம், தாய் ஒரு மதம், மகன் ஒரு மதம் பின் பற்றுவர். மதச் சண்டையில்லை. மதம் என்பது ஒவ்வொருவனுடைய மனதைப் பொறுத்தது என்று எண்ணுகின்றனர். (5) இங்கு சாஸ்திரம் பேசுபவர்கள் ஐஸ் என்னும் ஜலக்கட்டியை அது யாரால் செய்யப்பட்டது என்பதையும் அறியாமல் சாப்பிடுவதை நான் கவனித்திருக்கிறேன். (6) ஆங்கிலம் கற்பவர்கள், பட்டதாரிகள் ஆங்கிலேயர் நடையுடையில் மோகங்கொண்டு அவர்களைப் பழிப்பதைப் போன்று நடக்கிறார்கள்.....மேல் நாட்டாரைப் போலிருக்க ஆசைப்பட்டவர்கள் அவர்களுடைய நற்குணங்களைப் பின்பற்றக்

---

பழங்காலத்து வாரப் பத்திரிகைகள் சிறு சிறு வியாசங்களை அளவறிந்து சுருக்கி வெளியிட்டன. இப்போதைய பத்திரிகைகளோ ஒவ்வொரு பக்கமும் ஒரே விஷயத்திலேயே நிறையும்படிப் பெரிய வியாசங்களாய் வெளியிடுவதில் படிக்க மனம் சலிக்கிறது. வர்த்தமானங்களே முக்கிய தாய்சரக்கு.

கூடாதா? இந்த வெளி வேஷத்திலா அவர்களைப் போலிருக்க முயற்சிப்பது?

***

"நாலாந் தலைமுறையைப் பார்த்தால் நாவிதனும் சிற்றப்பனுவான்"

**தீண்டாதாரின் ஆலயப் பிரவேசம்.**

என்பதற் கிணங்கத் தீண்டாமையை அலசிப்பார்த்தால் அதுவும் ஒரு அறியாமையான கட்டுப்பாடென்ற முடிவுக்கே வரும்படியாகும். தீண்டாதாரை விடக் கேவலமான நிலையோடும் மற்ற ஹிந்துக்கள் சோவிலுக்குச் செல்லாமலில்லை. இரவு முற்றும் சிற்றின்பச் சேற்றில் கிடந்து மறுதினம் ஸ்நானம் செய்யாமலே கோவிலுக்குச் செல்வாரில்லையா? பூரணமாய்க் குடித்து விட்டுக் கோயிலுக்குச் செல்வதில்லையா? கோயிலில் மதன காம சல்லாபங்கள்-கண்ணேக்குகள் நடப்பதில்லையா? கோயில் தரிசனம் மன்மத தரிசனமாவதில்லையா? கோயிலில் எத்தனையோ ஆபாஸ கிருத்யங்கள் நிகழவில்லையா? கொலையாளி, காமி, குடியன், வேசிக்கள்வன், கத்தரித்திருடன் இவர்களெல்லாம் கோயிலுக்குள் நுழைவதில் கோயிலின் பரிசுத்தம் கெடாதாகில், தீண்டாதார் நுழைந்தால் மட்டில் கெட்டுவிடுமோ? நாவிதனைத் தொட்டால் தீட்டு, அவன் மேளம் வாசிப்பவனுய் வரின் நடு வீட்டிலே குந்தவைத்தல், அவன் வைத்தியபண்டிதராய் வரினே அவன் சட்டியில் கிண்டிய லேகியம் வயிற்றுக்குள்ளே போகலாமாம்! ஒரு பஞ்சமனைத் தொடலாகாதாம். அவன் கிறிஸ்து மதத்தில் சேர்ந்து 'துரை' யிடம் பொட்லராயிருந்தால் அவனுடன் கைகுலுக்கலாமாம்! தீண்டாமை என்பதற்கே உண்மைப்பொருள் விளங்கவில்லை. லாகூர் பக்கத்தில் எட்டு ஹிந்துக் கோயில்களுக்குள் தீண்டாதார் செல்லலாமென்று கோயில் அதிகாரிகள் அநுமதித்து விட்டனர். பூனுவில் பார்வதி ஆலயத்திற்குள் தீண்டாதார் செல்ல வெகுவாய் முயற்சித்து வருகின்றனர். தீண்டாதார் விழித்துக் கொண்டுவிட்ட நிலையில்—காலத்தின் சக்திகளையும் மாறுதல்களையும் சிந்திக்காது எதிர்த்தலானது எதிர் ஆறு நீந்துதல் போலவே நிஷ்பிரயோஜனமாய் முடியும்.

***

"காயும் கனியும் உண்டானல் கார்த்திகை மாதம் கலியாணம்"

**சாரதா விவாக சட்ட விதிகள்.**

என்ற பழமொழி பொய்த்துப்போய் ஆணுக்கு 18-ம், பெண்ணுக்கு 14-மாக வயது வந்திருந்தால் தான் கலியாணம் என்று ஏற்பட்டு விட்டது. இந்த விவாக சட்டத்தில் பெண்ணுக்கு சிக்ஷை கிடையாது. மாப்பிள்ளைக்கோ, மணஞ் செய்வித்தவருக்கோ சிக்ஷை. அது 1000-ரூபா அபராதமாவது, ஒருமாத வெறுங்காவலாவது, அல்லது இருவகை சிக்ஷையாவது விதிக்கப்படும். அபராதம் செலுத்தாவிடில் அதற்காகத் தனித் தண்டனை யில்லை. இவ்வழக்கைபிரசிடென்ஸி மாஜிஸ்திரேட் அல்லது ஜில்லா மாஜிஸ்டிரேட் இவ்விருவருக்கு மட்டுமே விசாரிக்க அதிகாரமுண்டு. விவாகம் நடந்த ஒரு மாதத்திற்குள் வழக்கு கொண்டுவரவேண்டும். மாதத்திற்கு மேற்பட்ட வழக்கு செல்லத் தக்கதல்ல. இதுவே சட்டத்தின் சுருக்கமான விவரமாகும். எந்தப் பயனுள்ள அத்தியாவசியகமான சட்டத்திலும் சிலருக்குப் பாதக மில்லாமலிராது.




(முன்பக்கம் 458-லிருந்து.)

## 157. "நாய் சந்தைக்குப் போனதுபோல"

சில சமயங்களில் அற்பர்கள் தங்களுக்குப் பணம் கிடைத்தால் அதைச் செலவிட வழியறியாமல் கண்டவற்றை வாங்கிக் கைப்பொருளைச் சின்னபின்னம் செய்வார்கள். உத்தமமான பொருளாகக் கொஞ்சம் விலை அதிகமாயிருந்தாலும் அதை வாங்கிக்கொள்ளக்கூடிய பெரிய புத்தி யிராது. நாய் சந்தைக்குப் போனதாகக் கீழ்கண்ட கதையைச் சொல்வதுண்டு. அக்கதையைத் தொடர்ந்தே வேறொரு பழமொழியும் உண்டாயிருக்கிறது :—

ஒரு ஊரில் ஓர் அம்மையார் இருந்தாள். அவள் காலமே எழுந்து தனது நித்தியக் கடன்களை முடித்துக்கொண்டு வீடுவீடாய்ச் சென்று பிச்சையெடுத்து வந்து ஜீவனம் செய்வது வழக்கம். அவளுக்குக் குழந்தைகளில்லாததால் ஆசைக்காக ஒரு நாயை யெடுத்துப் பிள்ளைபோல் வளர்த்துவந்தாள். அச்சுணங்கனிடம் அவள் தனது சொந்தப் பிள்ளைபோல் அவ்வளவு அன்பாயிருந்தாள். தினந்தோறும் அவள் சமையல் செய்ததும் நாய்க்கு முதலில் அமுது அளித்துவிட்டுப் பின்பு தான் புசிப்பாள்.

இப்படி நடந்துகொண்டிருக்கையில் ஒருநாள் நாய்க்கு அதிகாலையிலேயே அதிகப் பசியுண்டாயிற்று. அதனால் அவளைச் சுற்றிச்சுற்றி வந்தது. அது பசியால் வருந்துவதைக்கண்ட அம்மையார் "இன்றையதினம் சோதனைபோல் ஒரு மணியரிசிகூட இல்லையே; வெளியிற் சென்று பிச்சை வாங்கிவந்த பின்பல்லவோ சமைத்துப் போடவேண்டும்" என்று ஏங்கிப் பிறகு அது பசித்திருப்பதைக் கண்டு மனம் தாளாமல் பக்கத்து வீட்டில் அரிசி கடன் வாங்கி அதற்குச் சமைத்துப் போட்டாள். நாயும் தன் பசி தீர்ந்ததும் தன் நன்றியைக் காட்டவெண்ணி அங்கிருந்த சிறு கூடையைத் தன் வாயினாற் கவ்விக்கொண்டு வெளியிற் சென்றது. அம்மையாருடன் திரிந்து அவள் பிச்சை எடுக்கும் விதத்தைக் கூடயிருந்து பார்த்திருப்பதால் தானும் அவ்விதமே பிச்சை எடுக்க முயன்றது. நாய் ஒன்று அவ்வாறு வெளியில் வந்து பிச்சை எடுப்பதைக் கண்டு வியப்புற்று ஒவ்வொரு வீட்டிலும் சந்தோஷமாய்ப் பிச்சை போட்டார்கள். நாய்க்குத் தூக்கமுடியாத பிச்சை சேர்ந்ததும் அம்மையார் தன் அரிசியை விற்கிற வழக்கமான கடைக்குச் சென்றது. அக்கடைக்காரன் அரிசியை எடுத்துக்கொண்டு அதன் விலையைப் பணமாக

---

போனதையும் இழந்ததையும் மறக்கச் செய். ஏனெனில், அது உன் ஆத்திரத்தைத் தணித்தலான காரியத்திற்கே—மனோ சாந்திக்கே. சென்றது கருதி சிந்தை நைதலிற் பி. ஏ. பட்டம் பெற்று ஆவதென்ன ஐயனே ?

அந்தக் கூடையில் போட்டான். இவ்விதம் சேருகிற அதிக அரிசியை எல்லாம் பணமாக மாற்றிக் கடைசியில் அரிசியும் பணமுமாக தன் வீட்டிற்கு சந்தோஷத்தோடும் திரும்பி வந்துகொண்டிருக்கையில், அந்த சந்தையின் ஓர் பக்கத்தில் ஓர் அந்தணர் இராமாயண காலக்ஷேபம் செய்துகொண்டிருந்தார். அக் கதை கேட்டவர்கள் தங்கள் சக்திக்கியன்ற பணம் காசுகளைக் கொடுத்தார்கள். அதைப் பார்த்து நின்ற நாயும் தானும் அப்படியே செய்ய நினைத்துத் தன் கூடையிலிருந்த பணம் காசு அரிசி முதலியவற்றை அவ்விடத்தில் அப்படியே கொட்டிவிட்டுத் தன் வீடு சென்றது. அற்பர்களுக்குச் சில சமயம் பெரிய புத்தி யுண்டானாலும், மறுபடியும் பழைய அற்பத்தன்மைக்கும் சிறுபுத்திக்குமே திரும்பிக்கொள்வது எப்போதுமுள்ள வழக்கமல்லவா ?

நாய் இவ்விதம் பிச்சை எடுப்பதைக் கண்ட இரண்டொரு கிழவிகள் அம்மையார் வீடு சென்று, "என்ன ஆச்சரியமடி! என்ன ஆச்சர்யமடி! உன் நாய் எத்தனை அழகாய் பிச்சை எடுக்கின்றதடி! தன் கூடையில் எத்தனையோ பணத்தைச் சேர்த்திருக்கிறதடி! உன் கஷ்டம் இன்றுடன் விடிந்தது! விடிந்தது! இனி நீ உன் வீட்டில் சுகமாயிருக்கலாம். உன் நாய் உன் வயிற்றை வாடவைக்காது சோறுபோடும். 'பெற்ற பிள்ளை சோறு போடாவிடினும் வைத்த பிள்ளை சோறு போடும்' என்று தெங்கு, பனை இவைகளைப்பற்றி வந்த பழமொழி உண்மையா யிருக்க, நாய் ஏன் சோறுபோடக்கூடாது ?" என்று அந்நாயைச் சிலாகித்துப் பேசினார்கள். இந்தச் சொற்களை யெல்லாம் கேட்ட அம்மையார் வியப்புற்று, நாய் வந்ததும் வெகு சந்தோஷத்துடன் அதிக ஆசையாய் அது கவ்விக்கொண்டிருந்த கூடையை வாங்கினாள். அது கனக்காமலிருக்கவே "பணமெங்கே குழந்தாய் !" என்று முகஞ் சுண்டினவளாய்க் கேட்கலுற்றாள். அதற்குள் சிலர் வந்து நாய் அத்தனை பணத்தையும் அரிசியையும் ராமாயணங் கேட்டுவிட்டு அங்கு கொட்டிவிட்டு வந்ததைத் தெரிவித்தனர். உடனே அம்மையார் கோபங்கொண்டு "கதை கேட்ட நாயைச் செருப்பாலடி" யென்று அதை யடித்துத் துரத்தினாள். இது தான் நாய் சந்தைக்குப் போன கதைபோல் என்று பழமொழியாய் வழக்கத்தில் வந்தது. அவள் நாயைக் கோபித்துக்கொண்டு அடித்தபொழுது சொன்ன வசனமாகிய

## 158. "கதை கேட்ட நாயைச் செருப்பாலடி"

என்பதும் ஒரு பழமொழியாகிவிட்டது. இந்தக் கதையைக் குழந்தைகளுக்குச் சொல்லி, அதைக் கேட்கும் குழந்தைகளைக் கடைசியில் "கதை கேட்ட நாயைச் செருப்பாலடி" என்று சொல்லும்போது குழந்தைகளெல்லாம் கலீர் என்று சிரிப்பதும் உண்டு.

---

"உயர்த்தப்பட்டார்" என்னும் மகத்துவச் சொல் பரமனை ஸதா சிந்தித்துத் தவம் கிடந்து அவர் நினைவே என்றுமாகி நின்றார்க்கே பொருந்துவதாம். அங்ஙனமன்றி, மதஞானமே சூன்யமாய், இவ்வுலக வாழ்க்கையே தாம் பெற்ற பெருஞ் செல்வமாய்க்கொண்டு, அதனிற்கண்ட சிறு சிறு குறைகட்கு மனம் வெதும்பி, அதனிமித்தமாக ஒருவீட்டினின்றும் மற்றொரு வீட்டிற்குக் குடியேறுவதுபோன்று—ஒரு மதத்தினின்றும் மற்றொரு மதம் மாறிப் புகுவாரை "உயர்த்தப்பட்டார்" எனல் யாங்ஙனம் பொருந்தும்? அது வீண் மயக்கே. இன்னோர் புகுந்த புது மதத்தின்கண்ணும் ஞான சூன்யராகவே இருப்பர்.

## 159, "எழுபது சென்றாலும் பறை ஏவித்தான் செய்யும்."

பறை என்பது ஒரு வாத்தியம். எழுபது வருடமாக அது உழைத்து வந்திருந்தாலும், அதைப் பிறர் தட்டினால்தான் சப்தம் கேட்கும். தானே சப்திக்கும் தன்மை அதற்கு இல்லை. ஒருவனுக்கு எழுபது வயது ஆனால் வயதுக்குத் தகுந்த அறிவும் அநுபோகமும் கூடியிருக்கவேண்டுமல்லவா? அது அற்பர்களுக்குக் கிடையாது. அவர்களுக்கு இன்னொருவர் ஒன்றைச் செய்யும்படி ஏவியபின்னர் செய்வதேயன்றித் தாமே சொந்த புத்தியுடன் முன்னதாக அதைச் செய்யத் தெரிகிற பெரிய புத்தி அருமை. இத்தகையோருக்கு வயது எழுபது ஆயினும் பயனென்ன? அவர்களுக்குப் பெரிய புத்தி உண்டாகக் காணோமே. மறுபடியும் அந்த அற்பத்தனமான சின்னப் புத்தியுடனே தான் கிடக்கிறார்கள். அற்பர்களுக்குப் பெரிய எண்ணங்களும் உயர்தரமான செய்கைகளும் உண்டாவதில்லை யென்பதைக் காட்ட இந்தப் பழமொழியை உபயோகப்படுத்துவர்.

## 160. "குரங்கின் நீரை மருந்துக்குக் கேட்டால் கொம்பு கிளைகளைத் தாவும்."

குரங்கின் சிறுநீரில் சில சரக்குகளை ஊறவைத்து அதிலேயே ஒரு மருந்தைச் செய்யவேண்டுமென்றிருந்தால், அதற்காகக் குரங்கைப் பிடித்துச் சிறுநீர் கேட்க நெருங்கினால் அது சுலபத்தில் கொடுக்குமா? நமது கைக்குத் தானும் அது அகப்படுமா? அதைப்பிடிக்கப்போக, அது கொம்புக்கும் கிளைகளுக்குமாய் ஓடித் தாவிக்கொண்டே யிருக்குமன்றி நமக்கு அகப்படாது; தனது சிறுநீரை அடுத்த நிமிஷத்தில் அது தன் சரீரத்தினின்றும் வெளிப்படுத்திவிடவேண்டியே வரும். அவ்விதம் வீணில் கீழே கொட்டிப் பாழாக்குமேயன்றி, அதை ஒரு மருந்துக்கு உதவுகிற விதமாக அது கொடுக்காது. அந்த சிறு நீரால் அதற்கு ஒரு பிரயோஜனமுமில்லாவிடினும் அந்த அற்பத்தைத் தருவதற்கு இல்லாத கிறுக்குகளெல்லாம் செய்து தான் எவரிடமும் அகப்படாமல் வெகு பெருமைப்படுத்திக்கொண்டு மரத்தின் உச்சிக்கு உயரத்தில் போய்விடும். இவ்விதமே, அற்பர்களால் ஒரு சிறுகாரியம் ஆகவேண்டியிருந்து, அந்த அற்பர்களை நாம் வேண்டிக்கொள்ளச் சென்றால், அந்தக் காரியத்தைச் செய்துகொடுப்பதில் அவர்களுக்கு எந்தவித நஷ்டமும் கஷ்டமும் இல்லாவிடினும், அந்த சமயத்திற்கு நமது கண்ணுக்கு எதிரில்கூட அகப்படாமல் மகா பெருமையுடன் மிகவும் கர்வித்து தூரப்போய் மறைந்துவிடுவார்கள். அந்த அற்பத்தை முடித்துத் தருவதற்குள் தங்களை வெகு பிரமாதப்படுத்திக் கொண்டு ஆரவாரிப்பார்கள். அவர்களைக் கெஞ்சியது போதுமென்று நாமே மனம் சலித்து ஒதுங்கும்படியாகவும் ஆகிவிடும். குரங்கின் சிறுநீர் கிடைக்காமல், வேறெந்த முறையிலாவது மருந்தை முடிக்க எண்ணுவதுபோல், இந்த அற்பர்களை வேண்டிக் கேட்டுக்கொண்டிருந்து அது முடியாமற்போய் வேறொரு வகையில் நமது காரியத்தைச் செய்து தீரும்படியாகவும் ஆகும்.

---

குழந்தை எந்த சாமானை எடுத்தபோதிலும் வீட்டுக்குள்ளேயே அது இருப்பதால் எடுத்ததைப்பற்றிக் கவலையில்லை. அன்னியர் எடுப்பினோ அது அவர் வீடு போய்ச் சேர்ந்து அவர் சொத்தாகி நமக்கு இல்லை யென்றாகிவிடும்.




தங்களைப் பிறர் ஒரு சங்கதிக்குக் கெஞ்சும்போது மிஞ்சி மீறுவதும், நமது காரியங்களை நிறைவேற ஒட்டாமல் அதற்கு ஒரு தாமதத்தை யுண்டுபண்ணித் தங்களை இன்னும் அதிகமாகக் கெஞ்சி வேண்டட்டுமென்று விறைப்பில் நிற்பதும் அற்பர்களின் ஸ்வபாவ மென்பதை இப்பழமொழி விளக்குகின்றது. அதாவது, எவ்வளவு அற்பமான வஸ்துவுக்குங்கூட அற்பர்களை ஒரு பொருட்படுத்தி வேண்டிக்கொள்ளாதிருக்கப் பார்க்கவேண்டுமென்பதும், அற்பசகவாசம் எந்த அவசரத்திலும் வேண்டாமென்பதும் இதன் முக்கிய பொருளாகும். (தொடரும்.)

## நம்மவர் புலம்பல்!

பழயஆசாரங்கள் அநாகரீகமாயினுமாகுக, அவற்றைக் கழித் தொதுக்குவதால் எங்கள் குலம் க்ஷீணமடையுமெனப் புலம்புவர் பல்லோர். மாரியம்மையைக் களிப்பிப்பான் வேப்பஞ்சீலை யுடுப்பதேயாயினும், பூசாரி பிரசாதிக்கும் பஸ்மத்தைப் பேய் கொண்டதாகக் கண்ட தம் பாலிகைகள் கொள்வதேயாயினும், சித்திரத்தும் எழுதொணு வனப்பு வாய்ந்த சிற்றிடைச் சிறுமியை நன்மை தீமையறியா முற்றி ளம் பருவத்தே-யாண்டும் எவராலும் எட்டுணையும் விரும்பா அவலக்ஷணம் செறிந்த கழிசிறைக்கு மணவினை முடிப்பதேயாயினும்,—என்செய்வோம்—உலகத்தோ டொத்து வாழ்வான்கருதி, அத்தை, பாட்டி, தலைவி முதலியவர்கள் சொல்லைத் தட்டி நடக்கத்துணியும்ஆற்றலில்லோம் எனப் புலம்பா நிற்பர். ஆங்கில பாஷாஞானப் பயிற்சியுடையாருள்ளும் பலர் இவ்விதமே தான் வெளியிற் புலம்புகின்றார்!

# விவாக ரத்து.

(சுதேசமித்திரன்.)

விவாக ரத்து விஷயமாக ஸ்திரீகள் ஆசாரச் சீர்திருத்த மகாநாடு செய்திருக்கும் தீர்மானத்தை நாம் ஒப்புக் கொள்ளுவதற்கில்லை. மகாநாட்டின் தலைவி கூறியதுபோல் மேனாட்டு வழக்கங்களை நாம் குருட்டுத்தனமாகப் பின்பற்றுவதில் பலனில்லை. மேலும், மேனாடுகளின் நிலைமைக்கும் இந்தியாவின் நிலைமைக்கும் உள்ள வித்தியாசங்களையும் கவனிக்க வேண்டும். மேனாடுகளில் விவாகமானது ஒரு முக்கிய மதச் சடங்காகக் கருதப்படுவதில்லை. அவரவர்கள் அவரவர்களுக்கு இஷ்டமானவர்களைத் தேடிக்கொள்வதும், ஒருவருக் கொருவர் எக்காரணத்தாலும் வெறுப்பு ஏற்பட்டுவிடின் விவாகத்தை ரத்துசெய்து கொண்டு விடுவதும் மேனாடுகளில் வழக்கமாக இருந்து வருகிறது. அதனால் சமூக வாழ்வே அங்கு சீர்குலைந்து போய்விட்டதென்றும், விவாகமென்பது அங்கு ஒரு வியாபாரமாகவே கருதப்படுகிறதென்றும் சொல்லுவது மிகையாகாது. இந்தியாவின் பழக்க வழக்கங்களும், மதக்கடமைகளும் வேறாகவிருக்கின்றன. இங்கு விவாகமானது ஒருமதக் கடமையாகவும், சதிபதிகள் இருவரையும் என்றென்றும் ஒன்று சேர்ந்து வாழ்ந்து வரும்படி செய்வதாகவும் இருக்கிறது.

# தீண்டாமை.

1. "தீண்டாதார் மற்றவர்களைவிட எவ்விதத்தில் குறைவான ஹிந்துக்கள் என்பது எனக்குத் தெரியவில்லை. அவர்களை என் கோயிலுக்குள் பிரவேசிக்க அநுமதிக்கக் கூடாதென்பதும் தெரியவில்லை."

—ஸ்ரீ ஜி. டி. பிர்லா.

2. "படித்தவர்கள் என்று சொல்லப்படுகிறவர்களைவிட, ஒடுக்கப்பட்ட வகுப்பினருக்கே கோயில்கள் அதியாவசியமானவை."

—ஸ்ரீ யமுனுலால் பஜாஜ்

3. "நான் மதபக்தியுடன் ஹிந்து சாஸ்திரங்களையும் நூல்களையும் அறிய உண்மையான முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறேன். ஆனால், தீண்டாமை என்ற கொடிய கொள்கைக்கு ஸ்மிருதியில் சந்தேகத்திற்கிடமான சில பாகங்களைத் தவிர வேறு ஆதாரமெதனையும் நான் காணவில்லை. தீண்டாமைக் கொள்கை ஹிந்து மதத்தின் தன்மைக்கே விரோதமானது."

—மகாத்மா

4. "கடவுள் ஸந்நிதானத்தில் உயர்வு—தாழ்வு—தீண்டப்படாதவர் என்ற வித்தியாஸம் கூடாது."

—ஸ்ரீ ஆச்சரிய ராய்.

---

அவர்களைச் சேர்ந்தோர் பல பொழுதுகளில் இவன் வீட்டில் புசித்திருக்க, இவன் வீட்டில் பெண்கள் வெளியூர் போனதால் மூன்று வேளை அவர்கள் வீட்டில் புசிக்கிறதற்கு—ஒரு படி அரிசி, சில்லரை சாமான், இரண்டணு எண்ணெய், இரண்டணு உருளைக்கிழங்கு, முக்காலணு வாழைக்காய், காலணு வெங்காயம், காலணு கொத்தமல்லி கருவேப்பிலை, அரையணு தயிர், காலணு இலை—இவ்வளவும் கொடுத்தானும். இது அருவருப்புச் சோறும் அசங்கிதக்கரியும் போலத்தான்! அரிசி கொடுத்து அக்காள் உறவென்ன?

---

"அமிர்த குணபோதினி" பிரஸ், 302, தங்கசாலைத் தெரு, சென்னை.—1929.